# 1,000 த்துக்கும் அதிகமான பரிசுகள்

ஒரு லட்சம் ரூபாய் பெறுமானம்

முதல் பரிசு:
அம்பாஸடர்
மார்க் II கார்
அல்லது
ரூ. 25,000
ரொக்கம்

ஹார்லிக்ஸ் மகிழ்ச்சிகரமான குடும்பப் போட்டி






உங்கள் ஹார்லிக்ஸ்
விற்பனையாளர்களிடம்
நுழைவு நமூனாக்கள் கிடைக்கும்

## முழுமையான ஊட்டம்பெற ஹார்லிக்ஸ்

'ஹார்லிக்ஸ்' ஒரு பதிவு பெற்ற ட்ரேட் மார்க்.

போட்டி முடிவு தேதி 31 டிசம்பர், 1972

MMM-3063 Tam.3



ஸத்குரு
ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்

உ

ஓம்

ஸ்ரீ சற்குரு துணை

# ஆராதனை

## 28-12-1972

## வியாழக்கிழமை



ஸத்குரு ஸ்ரீ குழந்தையானந்த
ஸ்வாமிகள்

ஸ்ரீமத் அகண்ட பரிபூரண ஸச்சிதானந்த கல்யாணகுண கம்பீர

# ஸ்ரீ சேஷாத்ரிநாத ஸத்குரு ஸ்வாமிகளின்
# 44-ம் ஆண்டு ஆராதனை மஹோத்ஸவப் பத்திரிகை

தர்மம் தழைத்து அதர்மம் அழிய, அன்ன ஜீவகோடிகளுமுய்ய, கர்மபக்திஞான யோக தத்துவங்களை உபதேசிக்க, ஸத்குருஸ்வரூபங்கள் அடிக்கடி அவதரிப்பது பாரத பூமியின் பெருமை.

இவ்விதம் 1870-ல் காஞ்சியில் ஸ்ரீ காமாக்ஷிதேவியின் அருளால் அவதரித்து, அன்னை மரகதவல்லியின் ஆக்ஞைப்படி திருவருணை அடைந்து, நாற்பது வருடங்கள் நான்கும் கடந்த அதீத நிலையில் நின்று, அநேகம் பக்தர்களுக்கு, இருள் இடர் நீக்கி அருள் சுடர் ஆக்கி, மெய்யறிவூட்டி நல்வழி காட்டி அருளிய மஹான்.

### கல்யாணகுண கம்பீர ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்

அன்னார் விபவஷ்ரு மார்கழிமீ க்ருஷ்ணபக்ஷ நவமி திதியன்று மஹாஸமாதி எய்தினர்.

### புனரவதாரம்

முக்ய சிஷ்யை காவேரியம்மையின் கசிந்துருகிய பிரார்த்தனையினாலும், பலபல பக்த கோடிகளின் அந்தரங்க ஆர்வத்தினாலும் ஆகர்ஷிக்கப்பட்டு அபயம் தந்து ஞான சித்தயோக விலாக்கிரமத்தில் 1942ல் புனரவதாரம் செய்தருளியிருக்கும் ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் கருணைதான் என்னே!

இங்ஙனம் அன்பர்களை ஆட்கொண்ட ஆனந்தரின் ஆக்ஞைப்படி ஸஞ்சஸூரில் ஸூக்ஷ்ம யோக ஸமாதி வைதிக முறையில் அமைந்து, நித்ய நைமித்திக பூஜைகளும், உத்ஸவங்களும் நடைபெற்று வருகின்றன. இவ்வருடம் சங்கத்தாரால் நடத்தப்படும் 30வது ஆராதனை உத்ஸவம் நிகழும் பரிதாபிஷு மார்கழி 9உ (23-12-72) சனிக்கிழமை முதல் ஆரம்பித்து 14உ (28-12-72) வியாழக்கிழமை ஆராதனை வைபவம் நடைபெறும். (பக்தர்கள் அனைவரும் வந்து சுடுபட்டு ஸூக்ஷ்ம ப்ரவேசத்தில் ஸ்ரீ ஸத்குருப்பிரசாதம் பெற்று உய்யக் கோருகிறோம்.) விரிவான நிகழ்ச்சி விபரங்கள் தனியாகப் பிரசுரிக்கப்படும். வழக்கம்போல் ஸ்ரீ ஸத்குரு ஸ்வாமிகளாலும், மற்றும் பல மஹனீயர்களாலும், ஸத்கதா காலக்ஷேபங்கள் நடைபெறும்.

வேத சாஸ்திர, ஆகம சபைகள் நடைபெறும். இதில் பிரபல வித்வான்கள் கலந்து கொள்வார்கள்

28-12-72 ஆராதனை தினத்தில் நாதஸ்வர வித்வான் சேகல் ரெங்கநாதன் கோஷ்டியாரால் ஊர்வலத்தில் நாதஸ்வரக் கச்சேரி நடைபெறும்.

ஸஞ்சஸூர்,
7-10-72

இப்படிக்கு
E. S. சிவராமகிருஷ்ணன் தலைவர்
K. V. சுப்பரத்னமய்யர் உப-தலைவர்
P. S. கோபாலகிருஷ்ணன் காரியதரிசி

---

குறிப்பு: 1. வெளியூர் அன்பர்களுக்கு இடவசதி ஆகார வசதி உண்டு.

2. அதிஷ்டான அஸோஸியேஷன் ரசீது புத்தகங்கள் உள்ளவர்கள் வசூலிக்க அனுமதியுள்ளவர்கள்.

3. ஆராதனைக்கு நன்கொடை அளிக்க விரும்புவோர் கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பவும் E. S. சிவராமகிருஷ்ணன், ஸ்ரீ சேஷாத்ரி நிலயம், டாடாபாத், 6வது வீதி, கோவை-12

4. ஸ்வாமிகள் சரித்திரம் குழுமணி நாராயண சாஸ்திரிகள் இயற்றியது 3வது பதிப்பு தயாராகிறது. வேண்டுவோர் முன்கூட்டியே மேற்படி விலாசத்திற்கு எழுதி பதிவுசெய்து கொள்ளவும்.

---

ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் அதிஷ்டானம் அஸோஸியேஷன் (பதிவானது) ஸஞ்சஸூர் S. R. (ஈரோடு வழி)

# என்றும் நிலைத்திருக்கும் விசுவாசம்

5000 ஆண்டுகளுக்கு முன், பீஷ்மர், நிலத்தின் ஆழத்திலிருந்து நேரடியாக குளிர்ந்த, புது நீரைப் பருக விரும்பினார். ஆனால் அதற்கு அர்ஜுனனின் உதவி தேவையாக இருந்தது!

விஞ்ஞானமும், தொழில் நுட்பமும் மிக்க நவீன உலகில், உங்களுக்கென இந்தக் காரியத்தை நாங்கள் செய்து தருவோம்!

சுய இயக்கமுடைய மையர்ஸ் அல்லது வாஸ்ப் டீப்வெல் இஜெக்டோ பம்புகளிலிருந்து, 54.86 மீட்டர் (180 அடி) ஆழத்திலிருந்துகூட தண்ணீரைப் பெறலாம்.

24 மணி நேரமும், குளுமையான, புதுநீர் நல்ல வேகத்துடன் பாய்ந்து வரும்.

இன்றே தொடர்பு கொள்ளுங்களேன்!

## இஜெக்டோ டீப்வெல் பம்புகள்

வாஸ்ப் அல்லது மையர்ஸ்



எந்தத் தேவைக்கும் பம்புகள்!

வாட்டர் சப்ளை ஸ்பெஷலிஸ்ட்ஸ் ப்ரைவேட் லிமிடெட்.
330, தம்பு செட்டித் தெரு, சென்னை - 1.

WS-116 A






ராஜாஜி மலர்

பொருளடக்கம்

பரிதாபி, கார்த்திகை 25 — டிசம்பர் 10, 1972


| | | |
|---|---|---|
| ராஜாஜி -- 94 (தலையங்கம்) | — | 5 |
| தமிழ் நாட்டிலே... | — | 8 |
| ஈடு இணையற்ற நாட்டுப் பணி | — | 11 |
| ராஜாஜியின் அரசியல் பிரவேசம் | — | 13 |
| அருள்வாக்கு | — | 19 |
| நூறன்மணிகளோடு ராஜாஜி மணிமொழிகள் | — | 20 |
| அலை ஓசை | — | 23 |
| சுதந்திரச் சிற்பிகள் | — | 33 |
| ஓர் எளிமையான நேர்மையான பேரரசர் | — | 35 |
| ஜாங்கோ ஜக்கு | — | 42 |
| ராஜாஜியின் ஜெயில் டைரி | — | 45 |
| தனிப்பெருந் தலைவர்களுடன்... | — | 47 |
| 94 — சதமாகட்டும்! | — | 49 |
| கனவுகளுக்கு அப்பால் | — | 52 |
| சத்திய வெள்ளம் | — | 57 |
| மரகதமணி சிந்தும்... | — | 67 |
| நடிகையர் திலகம் | — | 74 |
| சுமைதாங்கி | — | 78 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


# அமிர்தாஞ்சன் கிரைப் மிக்ஸ்சர்

ஆரோக்கியமும் மகிழ்ச்சியுமூட்டுவது

அஜீரணம், வாயு, தூக்கமின்மை, வாந்தி, வயிற்றுப்போக்கு போன்ற குழந்தையின் உடல் கோளாறுகளை விரைவில் குணப்படுத்துகிறது.
பசியைத் தூண்டி, ஜீரணசக்தியைச் சீராக்கி, குழந்தையை ஆரோக்கியத்துடன் கொழுகொழுவென்று வளரச் செய்கிறது.






அமிர்தாஞ்சன் லிமிடெட்

FDSAG-1660 TM

उड़िशा सिमेंट लिमिटेड

ORISSA CEMENT LIMITED

4, SCINDIA HOUSE, NEW DELHI-1

POST BOX : 304
NEW DELHI-1

# எழுத்து மூலமே உத்தரவாதம் அளிக்கிறோம்

உங்களது உலைக் கற்கள் தேவைகளுக்கு ஒரிஸ்ஸா ஸிமெண்ட் ஸ்தாபனத்திற்கு ஆர்டர் கொடுத்தீர்களானால், உங்கள் உற்பத்தி தடைப்படாது. அவை குறித்த காலத்தில் உங்களுக்குக் கிடைக்கும்; காலதாமதமே ஏற்படாது என்று நிச்சயமாக நீங்கள் இருக்கலாம்.

உலைக் கற்களுக்கு "டால்மியா" என்பது இவற்றை உபயோகப்படுத்துபவர்களுக்கு நன்கு தெரியும். நீண்டகால ஒப்பந்தத்தில் ஆர்டர்களையும் நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம்.

Yours faithfully,
for ORISSA CEMENT LIMITED

Registered Office : RAJGANGPUR (Ori

**DALMIA REFRACTORIES**

GOVAN/OCL/7113

கல்கி

மலர் 32
இதழ் 19



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா

— பாரதியார்

# ராஜாஜி — 94

எங்கு பார்த்தாலும் சேறும் சகதியும், முள்ளும் கல்லுமாக இருக்கும்போது. அதன் நடுவே அப்பழுக்கற்ற ஒரு செங்கமல மலர் நுட்பமான மணம் வீசிக் கொண்டு ஓங்கி நிற்கக் கண்டோமாயின் மனத்துக்கு எத்தனை குளிர்ச்சியாக இருக்கிறது? தமிழகத்திலும், ஆந்திரத்திலும், தேசம் முழுவதிலும், ஏன் சர்வதேச அரங்கிலுமே போட்டியும், பொறாமையும், துவேஷமும், ஊழலும், வன்முறையும் மலிந்து நம் மனம் சாம்பிக்கிடக்கும் சூழலிலே, மனத்தை மலர்விக்கும் செந்தாமரைக்கு ஜயந்தி கொண்டாடுவதுபோல் ராஜாஜி பிறந்த நன்னாள் நிகழ்கிறது. சூதும் வாதும் நிறைந்த அரசியல் சகதியில் ஒரு நிர்மல கமல மலராக ஓங்கி நிற்கிறார் ராஜாஜி. ஒழுங்குப்பாட்டுக்குப் பெயர் கொண்ட பாரத தர்மமே இந்தத் தாமரையின் அடுக்கடுக்கான இதழ்கள். பக்தியே அதன் பொகுடு. ஞானம் என்பது அதன் மணம். தியாக சேவையே அதன் தேன். இது வாடாத தாமரை. ஏனெனில் இதை மலர்விக்க வெளிச் சூரியன் வேண்டியதில்லை. இதன் இதயத்துள்ளேயே எப்போதும் அன்பொளி பொழிந்து கொண்டிருப்பதால் இந்தத் தாமரை கூம்புவதில்லை, வாடுவதில்லை, கசங்குவதில்லை. எப்போதும் தானும் மலர்ந்து மற்றோரையும் மலர்விக்கிறது.

தொன்றுதொட்டு வந்த பண்புகள் யாவும் ஒருருவாகி அதற்குத் தொண்ணூற்று நான்காவது பிராயம் தொடங்குகிறது. சாதாரண மானுட வாழ்வில் தொண்ணூற்று நான்கு என்பது தொண்டு கிழப் பருவமாக இருக்கலாம். ஆனால் சத்தியம், தர்மம், தியாகம், பிரேமை இதற்கெல்லாம் வயது கனிப்பதும், அவை மூப்புறுவதும் உண்டோ? உத்தம குணங்களின் உருவகமான ராஜாஜி ஆஞ்சநேயரைப் போலச் சிரஞ்சீவியாக வாழ்ந்து உலகை வாழ்விக்க வேண்டியவர். உலகத்துக்கு ஒரு ரட்சையாக அவரை இறைவன் எந்நாளும் வைத்திருக்கப் பிரார்த்திப்போம்.

“ராஜாஜி அன்றே எச்சரித்தார்! இன்று அவர் சொன்னது மெய்யாகி விட்டது” என்று பல சந்தர்ப்பங்களில் உலகம் பச்சாத்தாபப்பட்டிருக்கிறது. இச்சந்தர்ப்பங்களில் தமது தீர்க்க தரிசனம் பலித்ததே என்று ராஜாஜி மகிழ்ந்ததில்லை. அதைக் கேளாமல், நாடு கெட்டதே என்று மனம் நொந்துதான் போவார். தாம் கூறியதைக் கேளாமல் அவதிக்கு ஆளான குழந்தைகளுக்கு அருட்தாயாகவே, ‘ஆபத்திலே வந்து பக்கத்திலே நின்று அதனை விலக்கிட’ முனைவார். ராஜாஜிக்கு நாம் செலுத்தும் ஜயந்திக் காணிக்கை, இனி இந்தப் பச்சாத்தாபத்துக்கு இடம் தராமல், அப்போதைக்கப்போதே அவர் கூறும் வழியில் சென்று விடுவதுதான். அந்த வழி —

ரிஷிபுங்கவர்கள் காட்டிய வழி;
வள்ளுவப் பெருந்தகை காட்டிய வழி;
கண்ணன் காட்டிய வழி.


கர்மத்தின் காவலர்
தர்ம தேவதை
அதர்மத்தின் எதிரி


லஞ்சம் ஊழல்


மக்களுக்கு வழிகாட்டி


சமன் செய்து சீர் தூக்கும் கோல்
பி.ஸி.ஜிக்கு எதிரான சாட்சியங்கள்
பி.ஸி.ஜி


எளியோருக்குக்
கை கொடுப்பவர்
துயருற்றோர்
இக்கட்டான
நிலையில்
சமாளித்து
உதவுபவர்
1952
நட்புப் பாலம்
அமைப்பவர்
பாக்
இந்தியா


வற்றாத
பேனா,
வாடாத
இலக்கியங்கள்


சுதந்திர
முழக்கம்

# அரசியலில் ஒரு வழிகாட்டி

ஒரு தேர்தலுக்கும் மறு தேர்தலுக்கும் இடையே உள்ள ஐந்தாண்டு காலத்தில், பல உறுப்பினர்கள், சொந்த நன்மையைக் கருதியோ, பதவி ஆசையினாலோ இதர காரணங்களாலோ கட்சி மாறுவதையும், மக்கள் நலனைப் புறக்கணிப்பதையும், வாக்காளர்களுக்குக் கொடுத்த வாக்குறுதிகளைப் புறக்கணிப்பதையும், நாம் அடிக்கடி பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். கட்சியினர்களும், சட்டசபை அங்கத்தினர்களும் இடைக்காலத்தில் தாங்கள் எப்படி நடந்து கொண்டாலும், தொகுதி மக்களால் ஒன்றும் செய்ய முடியாது என்பதை உணர்ந்து கொண்டு, காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ளுவதுதான் விவேகம் என்று நடந்து கொள்ளுவதையும் பார்க்கிறோம். இந்நிலைக்குப் பரிகாரம் சட்டப்படி இல்லை. ஒரு தரம் வோட்டுப் போட்டுச் சட்டசபைக்கு அனுப்பிவிட்டால், அதை ரத்து செய்து அவரைத் திருப்பி அழைத்துக்கொள்ள முடியாது. ஒரு கட்சியின் ஆதரவில் வெற்றி பெற்று, கட்சி மாறும்போது, ராஜிநாமா செய்து மக்களின் நம்பிக்கையை மீண்டும் பெற வேண்டும் என்பது ஜனநாயகத்தில் உயர்ந்த பண்பு; சிறிய கருத்து. பலரால் கருத்தளவில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் இக்கருத்தை யாருமே நடைமுறையில் பின்பற்றுவதில்லை.

இந்த அவல அரசியல் நிலைமையில், ஊர்வலங்கள் மூலமும், மகஜர் மூலமும், தொகுதி எம்.எல்.ஏ.க்களிடமே நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தைக் கொடுத்து, அவர்களை அரசியலில் நாணயமுள்ளவர்களாக ஆக்க முற்படுவது ஜனநாயகப் பண்புக்கும், பாரதப் பண்புக்கும், காந்தியச் சாத்வீகச் செயல் முறைக்கும் முற்றிலும் இசைவான நடவடிக்கை. தொகுதி வாக்காளர்களின் ஆதரவை ஒதுக்கித் தள்ளும் தைரியம் எந்த எம். எல்.ஏ.க்கும் இருக்காது. அரசியலில் தொடர்ந்து நிலைக்க வேண்டுமானால், சட்டத்தில் சொல்லப்படாத, சட்ட மூலம் பரிகாரம் காண முடியாத ஒரு பிரச்னைக்குத் தீர்வு காணப் பல அரசியல் அறிஞர்கள் ஆதரிக்கும் ஒரு முறையைக் கண்ணியமான வகையில், அமைதியுடனும், அழுத்தத்துடனும் கடைப்பிடித்து முன் உதாரணத்தை ஏற்படுத்திக் காட்டியதற்கு ஜனநாயகம் திரு எம். ஜி. ஆர். அவர்களுக்கு நன்றி சொல்லுகிறது.

## தமிழ் நாட்டிலே...

தீரன்

### கல்வி நிலையத்துக்குள் கட்சிக் கூட்டமா?

சமீபத்தில் சேலத்துக்கு அருகிலுள்ள பரமத்தி வேலூரில் நடைபெற்ற கலவரங்களையும், வன்முறைகளையும் பற்றித் தமிழ்நாட்டு முதல்வர் மிகவும் வருத்தப்பட்டுள்ளார். அந்த ஊரில் நிகழ்ந்துவிட்ட அசம்பாவிதங்களும், ஊருக்குள் நுழைந்து தம் கட்சியினர் ஏற்பாடு செய்திருந்த தி.மு.க. கூட்டத்தில் கலந்து கொண்டு பேச முடியாமலே முதல்வர் திரும்பி விட நேர்ந்ததும் வருத்தத்துக்குரியவைகள்தாம். ஆனால் இப்படி ஒரு கலவரம் உண்டாவதற்குக் காரணமாக இருந்தவர்கள் தம் கட்சியாகிய தி. மு. க.வைச் சேர்ந்தவர்களே என்பதை உணர்ந்து அவர்களையும் முதல்வர் கண்டித்திருக்க வேண்டும். ஏனோ அவர் அப்படிச் செய்யவில்லை. கலவரமும் எதிர்ப்பும் எழுந்ததற்குக் காரணமே பரமத்தி வேலூரில் உள்ள ஓர் உயர்நிலைப் பள்ளிக் காம்பவுண்டுக்குள் தி. மு.க.வினர் தங்கள் கட்சிப் பொதுக்கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்ததுதான்.

அந்த ஊர் மாணவர்களும், பெரு பொதுமக்களும் கல்வி நிலையக் காம்பவுண்டுக்குள் கட்சிக் கூட்டம் நடத்துவதை எதிர்த்துத்தான் காலையிலேயே போர்க்கொடி உயர்த்தியிருக்கிறார்கள். அந்த நியாயமான எதிர்ப்பை மதித்து உடனே கூட்டத்தை வேறு இடத்துக்கு மாற்றியிருந்தால் இவ்வளவு சேதமும் ஏற்படாமல் தடுத்திருக்க முடியும். மாலையில் நடைபெற இருந்த முதல்வரின் கட்சிக் கூட்டத்தைக் கல்வி நிலைய எல்லைக்குள் நடத்தக் கூடாது என்று காலையிலிருந்தே மாணவர்களும் பொதுமக்களும் கண்டன ஊர்வலம் நடத்தியிருக்கிறார்கள் என்பதால் கூட்டத்தை வேறு இடத்துக்கு மாற்றிக் கொள்வதற்குப் போதுமான முன் அவகாசம் இருந்தும் தி. மு. க.வினர் அப்படிச் செய்ய முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை என்றே ஆகிறது. இந்த அடிப்படைத் தவற்றை வெளியிடாமல், 'குடமுருட்டி வெடிகுண்டு' — 'அண்ணாமலை நகரில் என்

உயிருக்கு ஆபத்து' என்கிற பழைய பாணியில் ''சேலம் வேலூரில் திட்டமிட்ட சதி நடந்திருக்கிறது. நான் அங்கே சென்றிருந்தால் பயங்கர விளைவுகள் ஏற்பட்டிருக்கும்'' என்று மட்டும் முதல்வர் கூறியிருக்கிறார். முதல்வர் சார்ந்திருக்கும் தி.மு.க.வினர் முதலிலேயே பள்ளிக்கூட எல்லைக்குள் தங்கள் கட்சிப் பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்யாமல் இருந்திருந்தால் முதல்வருக்கு இப்படி நேர்ந்திருக்காது. இதற்காக முதல்வர் யாரையாவது நொந்து கொள்ள வேண்டுமானால் தம் கட்சியினரைத்தான் நொந்து கொள்ள வேண்டியிருக்கும்.



## காய்கறி விலைகள்

அரிசி, சர்க்கரை, பலசரக்குச் சாமான்கள் எல்லாம் விலை ஏறியது போதாதென்று இப்போது சிறிது காலமாகக் காய்கறிகளின் விலைகளும் பயங்கரமாக ஏறிவிட்டன. பருவநிலை சாதகமாக இருந்தும் காய்கறி உற்பத்தி சென்ற ஆண்டுகளைவிட அதிகமாக இருந்தும் விலைகள் மட்டும் ஏறிய காரணம் என்னவென்று தெரியவில்லை. கீரை, கத்திரிக்காய் போன்ற எப்போதும் மலிவான வகைகள் கூட விறுவிறுவென்று விலை ஏறிவிட்டன. புடலங்காய் திடீரென்று அறுபது காசு, எழுபது காசு என்று விற்கத் தொடங்கிவிட்டது. சுமாரான கத்திரிக்காய்கூடக் கிலோ இரண்டு ரூபாய் வரையில் விற்கும் நிலை வந்திருக்கிறது. இதில் வேடிக்கை என்னவென்றால் நீலகிரி கொடைக்கானல் போல மலைப் பகுதிகளிலிருந்து வருகிற காய்கறிகளைவிட (இங்கிலீஷ் காய்கறிகள்) புடலங்காய், கத்திரிக்காய், கீரை போன்ற நாட்டுக் காய்கறிகளே அகர விலைக்கு ஏறி நிற்பதுதான். தினசரி உபயோகப் பண்டமான காய்கறி விலை உயர்வால் பெரும்பாலான மத்திய தரக் குடும்பங்கள் பெரிதும் சிரமப்படுகின்றன. என்று விடிவு பிறக்குமோ ?

## முதல்வரும் எலுமிச்சம்பழமும்

எம். ஜி. ஆர். நடத்திய வாக்காளர் பேரணியின் சார்பில் சைதாப்பேட்டை வாக்காளர்கள் தங்கள் தொகுதியின் எம்.எல்.ஏ. ஆன முதல்வர் கருணாநிதியிடம் மகஜர் கொடுக்கச் சென்றிருந்தார்கள். கோபாலபுரத்திலுள்ள முதல் அமைச்சரைச் சந்தித்து, மகஜரைக் கொடுத்தபோது அதை வாங்கிக் கொண்டு வந்தவரிடம் ஓர் எலுமிச்சம் பழத்தை எடுத்துக் கொடுத்திருக்கிறார் முதல்வர். 'மகஜர் கொடுக்க வந்தவரிடம் எலுமிச்சம் பழம் கொடுத்ததற்கு என்ன அர்த்தம்?' என்று பின்னால் நிருபர்கள் கேட்டபோது, முதல்வரையும் முந்திக் கொண்டு, ''வந்தவர்கள் தலையில் தேய்த்துக் கொள்வதற்காக'' என்று முதல்வருடன் இருந்த தி.மு.க. ஒருவர் பதில் கூறியிருக்கிறார். ஆனால் உடனே முதல்வர் குறுக்கிட்டு, ''அப்படியல்ல ! சும்மாதான் கொடுத்தேன்'' என்று சொல்லிவிட்டார். ஆனாலும் முதல்வரோடு இருந்த தி.மு.க. அன்பர் பேசிய வேகத்தை


பெங்களூர், கர்நாடக கான கலா பரிஷத் (ரிஜிஸ்டர்டு)
(7, கனகபுரா ரோடு, பஸவன்குடி.)
சங்கீத வித்வான்களின் மூன்றாவது மகாநாட்டு இசை விழாவில்

சங்கீத கலாநிதி
ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ... பாட்டு
ஸ்ரீ வி. வி. சுப்பிரமணியம் ... வயலின்
ஸ்ரீ டி. கே. மூர்த்தி ... மிருதங்கம்
ஸ்ரீ வி. நாகராஜன் ... கஞ்சிரா



○ ○ ○

10-12-1972 ஞாயிற்றுக்கிழமை காலை 9-30 மணிக்கு
பெங்களூர், மல்லேஸ்வரம் ஸ்ரீராம மந்திரத்தில்

யும், கோபத்தையும் பார்த்தால் அவரும் முதல்வரிடம் ஓர் எலுமிச்சம் பழம் வாங்கிக் கொள்ள வேண்டிய நிலையில்தான் இருக்கிறார் என்று தெரிய வருகிறது.

## வெளியிடத் தயக்கம் ஏன்?

'துணிவிருந்தால் குற்றச்சாட்டுக்களை வெளியில் கூறுவதுதானே?' என்றும், 'குடியரசுத் தலைவருக்கு அனுப்பியிருக்கும் ஊழல் பட்டியலை வெளியிட ஏன் தயங்க வேண்டும்?' என்றும் தி.மு.க. அமைச்சர்களான அன்பழகன், நெடுஞ்செழியன் போன்றோர் அடிக்கடி எம்.ஜி.ஆருக்குச் சவால் விட்டுவருகிறார்கள். ஆனால் இப்போது அந்த வாய்ப்பு அவர்களுடைய தலைவரும், முதல்வரும் ஆன திரு மு. கருணாநிதி அவர்களுக்கே இருக்கிறது. ஏனெனில், எம். ஜி. ஆர். குடியரசுத் தலைவரிடம் கொடுத்து, குடியரசுத் தலைவர் பிரதமருக்கு அனுப்பி, பிரதமர் அதையே தமிழ் நாட்டு முதல்வருக்கு அனுப்பி வைத்து விளக்கம் கேட்டிருக்கிறார். இந்த நிலையில் தம் கையிலிருக்கும் அந்தக் குற்றச்சாட்டுக்களையும் அதற்கான பதில்களையும் வெளியிடும்படி முதல்வரையே அவர் நண்பர்கள் கேட்க வசதியிருக்கிறது. அதை விட்டுவிட்டு எம். ஜி. ஆரை நோக்கி, துணிவிருக்கிறதா, ஆண்மையிருக்கிறதா — தைரியமிருக்கிறதா என்றெல்லாம் வழக்கமான புளித்துப்போன வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருப்பதில் அர்த்தமே இல்லை. அடுத்தவர்களை நோக்கித் துணிவு, ஆண்மை பற்றி வினவிக் கொண்டிருப்பதை விடத் தாங்களே துணிவும், தைரியமும் உள்ளவர்கள் என்பதை மக்களிடம் முன்வந்து நிரூபித்து விடலாமே?

## மாணவர்கள் சமூகப்பணி

சென்னையைச் சேர்ந்த பல்வேறு கல்லூரி மாணவர்கள் புதியவிதமான சமூக சேவைப் பணி ஒன்றைத் தாங்களாகவே முன்வந்து செய்யத் தொடங்கியிருக்கிறார்கள். பிரயாணிகளின் கூட்டம் அதிகமாயிருக்கும் நெருக்கடி நேரங்களிலும் பிற சமயங்களிலும் சென்னை சுற்றுப்புற மின்சார இரயில் ஊழியர்களுக்குப் பிரயாணிகளின் டிக்கட்டுகளைப் பரிசோதனை செய்வதில் மாணவர்கள் உதவி செய்ய முன் வந்திருக்கிறார்கள். சென்னை நகரிலுள்ள பல்வேறு கல்லூரி மாணவர்கள் குழுக்களாக இணைந்து சென்ற சில ஆண்டுகளாகத் தாம்பரம் — கடற்கரை நிலையங்களுக்கு இடையில் இந்தப் பணியைப் புரிந்து வருகிறார்கள். இப்பணியைச் செய்யும் மாணவர்களைப் பிரயாணிகள் அடையாளம் புரிந்து கொள்வதற்காகக் கல்லூரி நிர்வாகமும், இரயில்வே நிர்வாகமும் ஒத்துழைத்து மாணவர்களைப் பாட்ஜுகள் அணியச் செய்திருக்கிறார்கள். சமூகநலனுக்கான ஆக்கப் பணிகளில் ஈடுபட முன் உதாரணமாக அமைந்துள்ளது இப்பணி. இப்பணியை மாணவர்கள் ஆர்வத்துடனும் வெற்றிகரமாகவும் செய்து வருவது மகிழ்ச்சியை அளிக்கிறது.




"எனக்கு 63,000 பேர் ஓட்டளித்தார்கள். ஐந்நூறு பேர்களே 'வாக்காளர் பேரணி'யில் என் ராஜினாமாவைக் கோரினார்கள். கோரிக்கையை எப்படி ஏற்பது?" —முதல்வர்

# ஈடு இணையற்ற நாட்டுப்பணி

பி.கே.நேரு

ராஜாஜியைப் பற்றிய எனது மிகப் பழைய நினைவுகள் 1922ம் ஆண்டு நவம்பர் வரை பின்நோக்கிச் செல்கின்றன. அப்போது, நாங்கள் கல்கத்தாவில் வசித்துக் கொண்டிருந்தோம். அங்கு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் ஒரு கூட்டம் நடைபெற்றது. மோதிலால் நேருவைப் பின்தொடர்ந்து சென்ற கோஷ்டியில் ஒருவனாக என்னை இணைத்துக் கொண்டேன். தினந்தோறும் கூட்டங்களுக்குப் போனேன். தேசபந்து தாஸ் வீட்டுத் தோட்டத்தில் விசாலமான துணிப் பந்தல் அமைக்கப்பட்டு அதில் கூட்டங்கள் நடைபெற்றன. அரசியல் ரீதியில் அ. இ. கா. க.யின் அந்தக் கூட்டம் மிகவும் முக்கியமானது. ஆனால் என்னைப் பொறுத்த வரையில் அதன் முக்கியத்துவத்துக்கு வேறு காரணம் உண்டு. இதுகாறும் தொலைவிலிருந்து பார்த்து நான் வியந்து போற்றிக் கொண்டிருந்த பலப்பல இந்தியத் தலைவர்களுடன் முதன் முறையாக நான் நேரடித் தொடர்பு கொண்டது இந்தக் கூட்டத்தின் போதுதான். அவர்கள் எல்லோரையும் எனக்கு இன்று ஞாபகம் இல்லை. ஆனால் ஐம்பது ஆண்டுகள் ஆன பின்னரும் மறக்க முடியாதவாறு அன்று என் உள்ளத்தில் ஆழப் பதிந்தவர்களுள் ராஜாஜியும் ஒருவர். கலபந்தில் வெற்றி கொள்ள முடியாத அபார வாதத் திறனுள்ளவர் என்று அன்றைக்கே அவர் பிரசித்தி பெற்றிருந்தார். அவர் அன்று மாறுதல் வேண்டாதார் கட்சியில் உறுதியாக இருந்தார். இளைஞர்களுக்கே இயல்பாக உள்ள தீவிரவாத மனப்பான்மையுடன் நான் முழுக்க முழுக்க அவர் பக்கம் இருந்தேன்.

இதன் பிறகு பல வருஷங்கள் நான் அவரைச் சந்திக்கவே யில்லை. ஆயினும் அவரது குணநலன்கள், நடவடிக்கைகள் ஆகியவற்றால் வேறு பல இந்தியர்களை விட அதிகமாக நான் பாதிக்கப்பட்டுப் பண்பட்டேன். இதற்குக் காரணம் உண்டு. என் தாயார் தென்னிந்தியாவில் பல ஆண்டுகள் ஹரிஜன ஆலயப் பிரவேசத்துக்காக உழைத்து வந்தாள். ராஜாஜி தாழ்த்தப்பட்டவர் நலனில் இன்று போலவே அன்றும் முழு அக்கறை கொண்டிருந்ததால் அவளுக்குப் பெரும் ஆதரவாக இருந்தார். அவள் எங்களிடம் அடிக்கடி இந்த மாபெரும் மனிதரைப் பற்றிப் பேசுவாள். 'நான்' என்ற நினைவையே அவர் அடியோடு துடைத்து விட்டிருக்கும் பான்மை, ரிஷிகளுக்கு ஒப்பான அவரது குண நலன்கள், அறிவுக் கூர்மை ஆகியவை பற்றிச் சொல்வாள். இதன் பயனாக நான் ராஜாஜியின் அரசியல் சிந்தனை முன்னேற்றங்களை — 1942ல் அவர் காங்கிரஸிலிருந்து விலகியது, ஜின்னாவுடன் பேச்சு வார்த்தை நடத்தியது முதலியவைகளை — மிகுந்த சுவாரசியத்துடன் கவனித்து வந்தேன்.

அடுத்தாற்போல் நான் ராஜாஜியுடன் நேருக்கு நேர் தொடர்பு கொண்டது, அவர் புதுடில்லிக்கு இடைக்கால சர்க்காரின் ஓர் அங்கத்தினராக 1946ல் வந்தபோது. நாங்கள் அச்சமயம் 3, கிளைவ் ரோட்டில் வசித்தோம். (இப்போது தியாகராஜா சாலை) அவர் பக்கத்து வீட்டில் இருந்தார். நெம்பர் ஒன்று. என் மனைவியும் நானும் பக்கத்து வீட்டுக்காரர் என்ற முறையில் சிறிய உதவிகளைச் செய்யும் பாக்கியம் பெற்றோம். அவருடைய மேதா விலாசம், ரிஷிகளைப் போன்று அவர் தரக்கூடிய ஆலோசனைகள் ஆகியவற்றால் நாங்கள் பல சந்தர்ப்பங்களில் பெரும் பயனடைந்தோம்.

ஒரு சமயம் நான் அவரிடம் இந்தியாவில் உள்ள அதி புத்திசாலிகளான குழந்தைகளுக்கு, அவர்களின் நுண்ணறிவை வளர்ப்பதுடன் குண நலன்களையும் விருத்தி செய்யக் கூடிய விசேஷக் கல்வி நிலையங்கள் அமைய வேண்டும் என்று வற்புறுத்திக் கூறினேன். கல்வியின் தரத்தைக் குறைத்து, கல்வி நிலையங்களின் எண்ணிக்கையை மட்டும் பெருக்கிக் கொண்டு போனால் நம் இளம் ஜனநாயகம் வாழவோ வளரவோ தேவைப்படும் உன்னதமான தலைவர்களைத் தோற்றுவிக்க முடியாது என நினைத்தேன். அவர் நான் சொன்னதைக் கவனமாகக் கேட்டுவிட்டுப் பின்னர் என் கருத்தை ஒரேயடியாக அடித்து வீழ்த்திவிட்டார்: ''இளைஞரே! நீர் விரும்புவது ஒரு புது விதமான பிராமண சமூகம். இந்தத் தேசம் அதனை ஏற்காது. அது சமத்துவத்தையே விரும்புகிறது; திறமையை அல்ல.'' இந்த உண்மையைக் கால் நூற்றாண்டுகளுக்குப் பிறகு இன்று மேலும் தெளிவாகக் காண்கிறோம்.



கட்டுரை ஆசிரியரும், ராஜாஜியும்

ராஜாஜியைப் பற்றிய எனது நினைவுகளில் மிகத் தெளிவாக இருப்பவை 1962 குளிர் காலத்தில் அவர், ஆர். ஆர். திவாகர், பி. சிவராவ் ஆகியோருடன் காந்தி சமாதான நிறுவனத்தின் சார்பில் அமெரிக்க சர்க்காருடன் பேசுவதற்காக வாஷிங்டனுக்கு வந்தபோது நிகழ்ந்தவை. இத்தூது கோஷ்டி அமெரிக்க சர்க்காரை அணு ஆயுதங்களைச் சோதனைக்காகக்கூட வெடிக்கக் கூடாது என வற்புறுத்தியது. இதுவே ராஜாஜி மேற்கொண்ட ஒரே ஒரு

## வியாசரைக் கண்டனர்!

❁ வியாசர் பூர்வ காலத்தவர். அவரோடு நமக்குப் பழக்கம் இடையாது. ராஜாஜியையோ நமக்குத் தெரியும். அவர்கள் நம்மோடு நாள்தோறும் பல துறைகளிலும் பழகி வருகிறவர்கள். நம்மோடு கலந்து பேசுகிறார்கள். -- ரஸிகமணி டி. கே. ஸி.

❁ வியாசருடைய உள்ளத்தை அப்படியே வெளியில் எடுத்துக் காட்டுவது என்பது ஸ்ரீ ராஜாஜி அவர்களைத் தவிர வேறு யாராலும் முடியாது. நல்ல மனமுடையவர்கள் கல்கி பத்திரிகையில் மகாபாரதம் படித்தார்களேயானால் ஸ்ரீ வியாஸரே ஸ்ரீ ராஜாஜி என்றுதான் கூறுவார்கள்.

-- சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்

---

அயல்நாட்டுப் பயணம். குளிரைத் தம்மால் தாங்க முடியாதோ என்றும் சாப்பாடு ஒத்துக்கொள்ளாதோ என்றும் அவர் கவலைப்பட்டார். ஆனால் வெப்ப நிலையைக் கட்டுப்படுத்தும் கருவிகள் என் வீட்டை 72 டிகிரி (ஃபாரன்ஹைட்)யில் வைத்திருந்தன. ராஜாஜிக்குக் குளிரவே யில்லை. தூதராலயத்தில் உள்ள தென்னிந்தியப் பெண்மணிகள் அவருக்காகத் தென் இந்தியப் பாணி உணவு வகைகளைச் சமைத்தார்கள். ஆகவே அவர் தம் வீட்டில் இருப்பதுபோலவே உணர்ந்தார். எனினும் பொதுவாக நோக்குமிடத்து அவர், எவ்வளவோ படித்திருந்தும் கூட மேற்கத்திய நாடுகளின் பொருளாதார முன்னேற்றம் இந்த அளவுக்கு அபரிமிதமாக இருக்கும் என எதிர்பார்க்கவில்லை என்பது தெரிந்தது.

தூதுகோஷ்டியை நான் ஜனாதிபதி கென்னடியைக் காண அழைத்துப் போனேன். காத்திருப்பதற்காக ஏற்பட்ட அறையில் (அமெரிக்க நாட்டின் மந்திரி சபை கூடும் அறையும் இதுதான்) நாங்கள் உட்கார்ந்து ஒருசில விநாடிகள் கூட ஆகியிராது.—ஒரு கதவு திறந்தது. இளைஞர் ஒருவர் சுறுசுறுப்பாக உள்ளே நுழைந்து வந்து எல்லாருடனும் கை குலுக்கினார். சற்றுத் தூரத்தில் இருந்த இன்னொரு அறைக்கு எங்களை அழைத்துச் சென்றார். அங்கு புகைப்படக்காரர்களின் 'ஃபிளாஷ்'கள் பளிச்சிட்டன. டெலிவிஷன் படமெடுப்பதற்காக விளக்குகள் பிரகாசித்தன. புகைப்படக்காரர்கள் பட்டாளம் படம் எடுக்க ஆரம்பித்தது. ராஜாஜியை விட அவருக்கு இடதுபுறத்தில் இருந்தவர் குறைந்தது பன்னிரண்டு அங்குலமாவது உயரமாயிருந்தார். ராஜாஜி தம் தலையை உயர்த்தி அவரைப் பார்த்தார். மிருதுவான குரலில் கேட்டார்: ''நான் அமெரிக்க ஜனாதிபதியின் முன்னிலையில் இருக்கிறேனா?'' புதுடில்லி வைஸ்ராய் மாளிகையின் படாடோபங்கள், சம்பிரதாயச் சடங்குகள் ஆகியவற்றுக்குப் பழக்கப்பட்டிருந்த ராஜாஜி, வெள்ளை மாளிகையின் எளிய சரளமான நடைமுறைகளைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது. ஜனாதிபதி கென்னடியே காத்திருக்கும் அறைக்குள் வந்து தம்மை உள்ளே அழைத்துப் போயிருக்கிறார் என்று புகைப்படங்கள் எடுக்கப்படும் வரையில் அவர் உணரவேயில்லை!



இதைத் தொடர்ந்து நடந்த உரையாடல் எனக்கு அசாதாரணமான மகிழ்ச்சியை அளித்தது. பல பெரிய மனிதர்கள், உலகின் பல பாகங்களில் தங்கள் கொள்கைகளை முன்னிட்டு ஒருவரோடு ஒருவர் தர்க்கம் புரிவதை அருகிலிருந்து கேட்கும் பேரதிர்ஷ்டம் எனக்குக் கிட்டியிருக்கிறது. ஆனால் தர்க்கத்தில் தெளிவு, வார்த்தைகளில் சிக்கனம், பொருத்தமான சொற்றொடர்களைப் பயன்படுத்தும் ஆற்றல், இதமான சுபாவம், வாதத்துக்கு எடுத்துக் கொண்ட விஷயத்தில் பரிபூரண ஞானம் இவற்றை ராஜாஜி அன்று வெளிப்படுத்தியது போல் வேறு யாருமே தமது கட்சியை எடுத்துச் சொல்கையில் வெளிப்படுத்தி நான் கண்டதில்லை. ஆற்றலை வெளிப்படுத்தும் பாணியை வெகுவாக ரசிப்பவர் ஜனாதிபதி கென்னடி. ஆன்படியால் அவரிடம் ஏற்பட்ட எதிர் விளைவுகளைக் கவனிப்பது ரொம்பச் சுவாரசியமாயிருந்தது. மேதா விலாசத்துடன் தமது கட்சியை எடுத்தியம்பிக் கொண்டிருந்த அந்த மெலிந்த, சிறிய மனிதரை வியந்து போற்று முகமாகக் கென்னடியின் கண்கள் அகன்று அகன்று விரிவதை அருகிலிருந்தவர்கள் காண முடிந்தது. ராஜாஜி தமது முயற்சியில் உடனே வெற்றி கண்டு விடவில்லை. இது ஏற்கனவே எதிர்பார்க்கப்பட்ட ஒரு முடிவுதான். ஏனெனில் உலகம் ஆளப்படுவது நல்லவர்களால் அல்ல, பலசாலிகளால்தான். ஆனால் ராஜாஜி, ஜனாதிபதி கென்னடியின் உள்ளத்தில் நிலையானதோர் இடம் பிடித்தார்.

எனக்குப் பல ஆண்டுகளாகவே ராஜாஜியுடன் எப்பொழுது வேண்டுமானாலும் தொடர்பு கொள்ளக் கூடிய கௌரவம் கிடைத்து வந்திருக்கிறது. அவரது அறிவாற்றல், கூர்மதி, பயமற்ற குணநலன்கள், சத்தியத்தை வழிபடும் தன்மை, நாட்டுக்கு அவர் ஆற்றியுள்ள பணிகள் இவையெல்லாம் ஈடு இணையற்றவை.

# ராஜாஜியின் அரசியல் பிரவேசம்

ஏ. கே. செட்டியார்

''விசேஷ காங்கிரஸ் அக்கிராஸனர் சுப்பிரமணிய முனீந்திரரா? லோகமான்ய திலகரா?'' —ராஜாஜியின் நேரடி அரசியல் பிரவேசம் ஓர் இக்கட்டான சந்தர்ப்பத்தில் நிகழ்ந்தது!



**1913**ஆம் ஆண்டில் தென்னாப்பிரிக்கா இந்தியர் நிவாரண நிதிக்காக ராஜாஜி தாம் பொருளுதவி செய்ததோடு, மற்றவர்களிடமும் பணம் வசூல் செய்து அனுப்பி வைத்தார். இது சம்பந்தமாக ராஜாஜி எழுதிய மூன்று கடிதங்கள் 'சுதேசமித்திர'னில் வெளியாயின. வசூலித்து அனுப்பிய தொகைக்கு விவரமான கணக்கு வெளியிட்டார். காந்தியடிகளையும், அன்னை கஸ்தூரிபாயையும் அரிச்சந்திரனுக்கும் சந்திரமதிக்கும் ஒப்பிட்டார்.



1916ஆம் ஆண்டில் காந்தியடிகள் காசி இந்து சர்வகலாசாலையில் பேசிய பொழுது, கூட்டத்திலிருந்த சுதேச மன்னர்கள் காந்தியடிகளின் பேச்சை ஆட்சேபித்து வெளியேறினர். இது சம்பந்தமாக அன்னிபெசண்டு அம்மையார், காந்தியடிகளின் பெருமைக்குப் பங்கம் உண்டாகும் வகையில் வெளியிட்ட அறிக்கையை ராஜாஜி கண்டித்து, காந்தியடிகளின் திறமையையும், பெருமையையும் போற்றிப் புகழ்ந்து 'ஹிந்து' பத்திரிகையில் எழுதினார்.



ஆனால் 1918ஆம் ஆண்டில்தான் ராஜாஜி இந்திய அரசியலில் நேரடியாகப் பங்கு கொண்டார் என்று தெரிகிறது.

மகான் மணி ஐயர் என்று மக்களால் போற்றப்படும் சர். எஸ். சுப்பிரமணியஐயர் நம் நாட்டின் நிலை குறித்து அமெரிக்க ஜனாதிபதி வில்ஸனுக்கு ஓர் அமெரிக்கர் மூலம் கடிதம் அனுப்பினார். அதைக் குறித்து லண்டனில் உள்ள பார்லிமெண்டு சபையில் இந்தியா மந்திரி பேசியபொழுது, மணி அய்யரை அவமரியாதையாகப் பேசினார். அதனால் இந்தியாவில், குறிப்பாகச் சென்னை மாகாணத்தில் பெரும் பரபரப்பு ஏற்பட்டது.

உணர்ச்சி வசப்பட்ட சென்னை அரசியல் தலைவர்கள் சிலர் அப்பொழுது நடைபெற இருந்த விசேஷ காங்கிரஸ் மகாநாட்டுக்கு மணி அய்யரைத் தலைமை வகிக்க வேண்டும் என்று கிளர்ச்சி செய்தனர்.

உணர்ச்சி வசப்பட்டு நமது கொள்கைகளை மாற்றிக் கொள்ளக் கூடாது என்று ராஜாஜி, ''சுதேசமித்திரனி''ல் ஓர் அரிய கட்டுரை எழுதினார்.

''விசேஷ காங்கிரஸ் அக்கிராஸனர் — சுப்பிரமணிய முனீந்திரரா? லோகமான்ய திலகரா?'' என்ற தலைப்பில் வெளியான கட்டுரை வருமாறு:

சேலம் ஹைகோர்ட்டு வக்கீல் மிஸ்டர் ஸி. ராஜகோபாலாச்சாரியார் அடியில் வருமாறு நமக்கு எழுதுகிறார்:

நமது ராஜ்யவாதிகளிடையே தங்கள் தங்கள் அபிப்பிராயம் போல் நடக்கும் ஒரு கொள்கை இருக்கிறது. விசேஷ காங்கிரஸின் அக்கிராசனத்துக்கு யாரைத் தேர்ந்தெடுப்பது என்கிற விஷயத்தில் இது வெளிப்படையாய்த் தெரியலாயிற்று.

ஸ்ரீஜத் சுப்பிரமணிய ஐயரைப் பார்லிமெண்டில் அவதூறாய்ப் பேசியது நாடெங்கும் ஆத்திரத்துடன் கண்டிக்கப்படுகிறது. நம்மைத் திறப்படுத்தி முன்னேற்றமடையச் செய்வதற்குத் தெய்வத்திறலாய வழிகள் பலவுள. நமது பீஷ்மாசாரியாரை அநாவசியமாய் அவதூறாய்ப் பேசியதில் சக்தியற்றிருந்த நமக்குப் பலம் உண்டாகி விட்டது. அத்

துடன் நமக்கு அது ஒரு நல்ல வழிகாட்டியுமாகிவிட்டது. இந்தியா மந்திரியால் சொல்லப்பட்ட வார்த்தைகளுக்கு நமது நாட்டிலிருந்து சரியான பதில் கொடுத்தாகிவிட்டது. நம்முடைய பிதாமகரிடம் தேசத்தாருக்குள்ள உண்மையான நம்பிக்கையைக் காட்டி எல்லா இந்திய ஜனங்களும் ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்து, அப்பத்திரம் அமெரிக்காவுக்கு அனுப்பப்படுமாயின் அது (இந்தியா மந்திரி) மிஸ்டர் மாண்டேகுவின் தூஷணைக்குச் சரியான பதிலாகும்.

நமது முனீந்திரரை அவமதித்துப் பேசியதிலிருந்தும், அதற்காக ஜனங்கள் ஆத்திரத்துடன் ஆட்சேபித்ததிலிருந்தும், விசேஷ காங்கிரஸின் அக்கிராசனம் யார் வகிக்க வேண்டியதென்கிற விஷயத்தில் ஜனங்களுள் ஒரு தப்பான எண்ணம் உதித்துவிட்டது. அவரை அவமதிப்பாய்ப் பேசியதற்காக, அவரிடம் நமக்குள்ள மதிப்பை மறுபடியும் வெளியிட வேண்டும் என்கிற எண்ணம் இருக்குமானால், மேற்குறிப்பிட்டபடி பத்திரம் வாசித்துக் கொடுப்பதே போதுமானது. அப்படிச் செய்தால் இந்தியா மந்திரியின் செய்கைக்குச் சரியான பதிலாய்விடும். இந்தப் பத்திரம் விசேஷ காங்கிரஸிலேயே வாசிக்கப்பட்டு அவருக்குக் கொடுக்கப்பட வேண்டும்.

ஆனால் நாம் நமது தலைவர்களைக் கௌரவப்படுத்த வேண்டும் என்கிற எண்ணத்திலாவது, அல்லது மிஸ்டர் மாண்டேகு அவமரியாதையாய்ப் பேசியிருக்கிறார் என்கிற ஆத்திரத்தைக் காரணம் கொண்டாவது, விசேஷ காங்கிரஸின் அக்கிராசனத்துக்கு யாரைத் தெரிந்தெடுப்பதென்று நிர்த்தாரணித்து விடக்கூடாது.

விசேஷ காங்கிரஸ் மிகவும் முக்கியமான விஷயம். அதன் அக்கிராசனத்தை வகிக்க லாயக்கானவர் என்று எல்லோராலும் மதிக்கப்படுகிற லோகமான்ய திலகரே அக்கிராசனம் வகிக்க வேண்டும். ஸ்ரீஜத் சுப்பிரமணிய ஐயரே லோகமான்ய திலகர் லாயக்கானவரென்று சொல்லியிருக்கிறார். பார்லிமெண்டில் ஸ்ரீஜத் சுப்பிரமணிய ஐயர் கடித விஷயமாய் நடந்த பிரஸ்தாபத்தைக் கொண்டு, விசேஷ காங்கிரஸின் அக்கிராசனத்துக்கு லோகமான்ய திலகரைத் தெரிந்தெடுப்பதில் எவ்வித மனக் குழப்பமும் உண்டாக இடம் கொடுக்கக்கூடாது.

'நியூ இந்தியா' (அன்னிபெசண்டு அம்மையாரை ஆசிரியராகக் கொண்டு சென்னையிலிருந்து வெளிவந்த ஆங்கிலத் தினசரி) பத்திரிகையும் லோகமான்ய திலகர் அக்கிராசனம் வகிக்க இஷ்டப்படவில்லை என்று சொல்லியிருப்பதைத் தவிர வேறொன்றும் சொல்லவில்லை. இதனால் அவர் மறுத்துவிட்டார் என்று சொல்ல முடியாது. நமது தேச முழுமையும் ஒரே மொழியாய் அவரை அக்கிராசனம் வகிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளும் பட்சத்தில், அதை அவர் மறுக்க மாட்டார்.

அக்கிராசனம் வகிக்க இஷ்டப்படவில்லை என்று சொல்வதற்கும், அக்கிராசனம் வகிக்க முடியாதென்று மறுத்துவிடுவதற்கும் வித்தியாசம் உண்டு. கனம் மாமுதபாத் ராஜா அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்வார் என்பது பற்றியே தமக்கு இஷ்டமில்லையென்று லோகமான்ய திலகர் சொல்லியிருக்கிறார்.

எவ்வளவு காலந்தான் ராஜீய விஷயத்தில் இப்படி நாம் தடுமாறிக் கொண்டிருப்பது? ஸ்ரீஜத் சுப்பிரமணிய ஐயரை இந்தியா மந்திரி அவமரியாதையாகப் பேசினார் என்றால், அதற்காக விசேஷ காங்கிரஸின் அக்கிராசனத்தை லோகமான்ய திலகர் வகிக்க வேண்டுமென்றிருந்த நமது எண்ணத்தை மாற்றிக்கொள்கிறதா ?

லோகமான்ய திலகரின் ராஜீய அபிப்பிராயங்கள் ஏற்கனவே தெரிந்தவை என்றும், அவரிடம் இங்கிலாந்தில் உள்ளவர்களுக்குத் திருப்தி இல்லையென்றும், அதனால் காங்கிரஸ் – லீக் திட்டத்தை அவர்கள் ஒப்பாமல் போகக்கூடுமாதலால், திலகர் அக்கிராசனம் வகிக்கக் கூடாது என்றும் சிலர் சொல்லுகிறார்கள்.

இந்த ஆட்சேபணை உண்மையானால் ஸ்ரீஜத் சுப்பிரமணிய ஐயர் விஷயம் எப்படி? அவருடைய ராஜீய அபிப்பிராயங்கள் ஏற்கனவே தெரியாதவைகளா? லோகமான்ய திலகர் பேரைக் கேட்கவே அதிருப்திப்படுகிறவர்கள் இருப்பதுபோல் இவருடைய பேரைக் கேட்டும் அதிருப்திப்படுகிறவர்கள் இல்லையா ?

சுய ஆட்சிப் பிரதிநிதிகளின் தலைவராய் எவரை நாம் அனுப்பி அவரை யுத்த மந்திரி சபையார் திருப்பிவிட்டார்களோ, அவர் மூலமாகவே நம்முடைய தேச அபிப்பிராயத்தை வெளியிட வேண்டும். ஸ்ரீஜத் சுப்பிரமணிய ஐயரை அக்கிராசனராகத் தெரிந்தெடுப்பின் அது மிஸ்டர் மாண்டேகு, ''மெயில்'' பத்திரிகை இவர்களின் எதிர்ப்புக்குப் பதிலாகும். லோகமான்ய திலகரைத் தெரிந்தெடுத்தால் அவரைத் திருப்பி அனுப்பிய யுத்த மந்திரி சபைக்குப் புத்தி புகட்டியதாகும்.

திலகரைத் தெரிந்தெடுங்கள். அந்தப் பெயரே, நம்முன் நம்பிக்கையை ஊட்டும். அப்பெயரே பிரிட்டிஷ் ஜனங்களுக்கு நம்முடைய மன உறுதியைக் காட்டும். அக்கிராசனாதிபதியின் பிரசங்கம் மற்ற உபந்நியாசங்கள் — இவைகளெல்லாம் வேண்டியதில்லை. ஏனென்றால் அவரே நம்முடைய கோரிக்கைகளுக்காக நிற்பவர். வேறு யாரையேனும் தெரிந்தெடுப்பீர்களானால் நம்முடைய கோரிக்கைகளில் விட்டுக் கொடுக்கும்படி நமது எதிரிகள் முயற்சிசெய்ய இடம் உண்டாகிவிடும்.

— ''சுதேசமித்திரன்'' 27-6-1918 பக்2.

ராஜாஜி ஒரு காரியத்தை எடுத்துக் கொண்டால், அதைத் திறமையாகச் செய்து முடிப்பதில் பேராற்றல் படைத்தவர் என்பதை உலகம் அறியும். செய்வன திருந்தச் செய்வதில் அவர் நிகரற்றவர்.

தமது கருத்தையே ஓர் அறிக்கையாகத் தயாரித்து, பாரிஸ்டர் ஜார்ஜ் ஜோஸப், வ. உ. சிதம்பரம்பிள்ளை, ஈ. வே. ராமசாமி நாயக்கர் ஆகியோர் உள்படத் தமிழ் நாட்டில் முக்கிய அரசியல் தலைவர்களான பதினெட்டுப் பெயர்களின் கையெழுத்துடன், ''இந்தியர்களுக்கு ஓர் அறிக்கை'' என்ற தலைப்பில் வெளியிட்டார். கட்டுரை வெளியான ஐந்தாவது தினமே அறிக்கையும் வெளியாயிற்று.

சேலத்தில் வசித்துவந்த ராஜாஜி, மாறுபட்ட சில அரசியல் தலைவர்களின் கருத்துக்களையும் மாற்றி, போக்குவரத்து வசதியும், இதர சாதனங்களும் குறைந்த அந்நாளில் தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்த அரசியல் தலைவர்களிடம் கையெழுத்து வாங்கி இவ்வளவு குறுகிய காலத்தில் அறிக்கை வெளியிட்டது சாதாரணமான காரியமன்று. அறிக்கையின் விவரம் :

இந்தியர்களுக்கு ஓர் அறிக்கை:

லோகமான்ய திலகரே விசேஷ காங்கிரஸில் அக்கிராசனம் வகிக்க வேண்டும்.

சகோதரர்களே !

இதுவரையில் கண்டறியாத ஒரு மிடுக்கான சந்தர்ப்பத்தில் நமது தேசம் இப்பொழுது ஊசலாடுகிறதென்பதை யாரும் மறுக்க முடியாது. தேசிய வாழ்க்கையில் இவ்வித சந்தர்ப்பங்கள் அடிக்கடி ஏற்படுவதில்லை. நம்மைப் பாதிக்கக்கூடிய முக்கியமான விஷயங்கள் யாதென்று நாம் மனத்தில் இடப்படுத்திக் கொள்ள வேண்டும். தற்கால நிலைமையை அடியில் வருமாறு சுருக்கமாகச் சொல்லலாம்.

1. இந்தியா மந்திரியால் ஒரு ராஜாங்கச் சீர்திருத்தப் பிரேரணை சீக்கிரம் வெளியிடப்படும்.

2. அது காங்கிரஸ் — லீக் கோரிக்கைகளுக்கு *.....வாயிருக்குமென்பது அநேகமாய் நிச்சயம்.

3. என்ன கொடுத்தாலும் ஒப்புக்கொண்டு விடுகிறதற்கு ஒரு சாரரான ஜனத் தலைவர்கள் தயாராயிருப்பதாய்த் தெரிகிறது.

4. ராஜாங்க சீர்திருத்தங்களைப் பற்றி ஆலோசிக்க நடைபெறப் போகும் விசேஷ காங்கிரஸின் அக்கிராசவத்துக்கு ஒருவரைத் தெரிந்தெடுக்கச் சென்னை மாகாண காங்கிரஸ் கமிட்டியார் சீக்கிரத்தில் ஒரு மீட்டிங் கூடப் போகிறார்கள்.

கவர்ன்மெண்டின் நன்மையைக் கருதியும், மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியின் பொறுப்பான மந்திரிகளால் அடிக்கடி விளம்பரப் படுத்தப்பட்டிருப்பவர்களை முன்னிட்டும் தெரிந்தெடுக்கப்பட்ட ஜனப் பிரதிநிதிகள் அடங்கிய சட்டசபைக்கு வரவுசெலவுகளில் பூரா அதிகாரத்துடன் காங்கிரஸ் — லீக் சீர்திருத்தங்களைக் கொடுக்க வேண்டியது அவசியம். இந்தச் சீர்திருத்தங்களை உடனே கொடுத்துவிட வேண்டும். இவ்விஷயத்தை வற்புறுத்தவும், ஜனங்கள் ஒரே மனத்துடன் இதை ஆதரிக்கிறார்கள் என்பதைக் காட்டவும் லோகமான்ய திலகர் அக்கிராசனம் வகிக்கக் கூடியதான இடத்தில் விசேஷ காங்கிரஸைக் கூட்ட வேண்டும்.

அவரை அக்கிராசனாதிபதியாகத் தெரிந்தெடுக்கும் விஷயத்தில் சில இடங்களில் ஆட்சேபணைகள் கூறப்படுகின்றன. லோகமான்ய திலகருக்கு அக்கிராசனம் வகிக்க இஷ்டம் இல்லையென்று சொல்லப்படுகிறது. ஒரே மொழியாய் ஜனங்கள் அவரைத் தெரிந்தெடுக்கும் பட்சத்தில் இந்தச் சந்தர்ப்பத்தில் ஜனங்களுடைய அபிப்பிராயத்துக்கு மாறாக அவர் நடப்பார் என்று நாங்கள் நினைக்கவில்லை. தேசத்தின் பெயரால் இவரை இதுகாறும் கேட்டுக் கொள்ளப்படவில்லை. கிரமப்படிக்கும் அவரைக் கேட்கப்படவில்லை.

நமது தேசத்தினரில் பெரும்பாலோர் காங்கிரஸ் — லீக் ஸ்கீமுக்கு விரோதமாக நடந்து கொள்ளமாட்டார்கள், இதற்காக எந்தத் தியாகத்துக்கும் தயாராயிருப்பார்கள் என்பது எங்களுக்குத் தெரியும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் நம்முடைய தலைவர்களில் சிலரின் நடத்தை திருப்திகரமாயில்லை என்பதும், உறுதியாயிருக்க வேண்டிய

* இவ்வார்த்தை ஐம்பதாண்டுகளுக்கு முற்பட்ட நாளிதழில் தெளிவாய் இல்லை.



காலத்தில் சஞ்சல புத்தி உடையவர்களா யிருக்கிறார்கள் என்றும் ஜனங்களின் பெரும்பாலோருக்குப் பலத்த சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. அவர்களுடைய அபிப்பிராயத்தையே நாங்கள் வெளியிடுகிறோம்.

விசேஷ காங்கிரஸின் அக்கிராசனத்துக்கு லோகமான்ய திலகரைத் 'தெரிந்தெடுத்தல் தான் நமது தேசத்தின் க்ஷேமத்துக்குப் பொருந்தியதாகும். இந்தச் சந்தர்ப்பத்தில் அக்கிராசனம் வகிப்பவர் ஆழ்ந்த தேசாபிமானம், தைரியமான ராஜதந்திர நிபுணத் தன்மை, தெளிவான நோக்கம் இவைகளை உடையவராயிருக்க வேண்டும்.

எங்களுடைய அபிப்பிராயத்தில் லோகமான்ய திலகர் ஒருவர்தான் இந்தச் சந்தர்ப்பத்தில் நமக்குத் தலைமையாயிருந்து நடத்தக் கூடியவர். அவரைத் தெரிந்தெடுத்தால் தான் நாம் காங்கிரஸ் – லீக் ஸ்கீமுக்குக் குறைவாய் எதையும் அங்கீகரிக்கிறதில்லையென்கிற மன உறுதியை உடையவர்களா யிருக்கிறோம் என்று காட்டக்கூடும்.

ஆகவே, எல்லா காங்கிரஸ் கமிட்டிகளையும் அவரை ஏகமனதாய்த் தெரிந்தெடுக்கும்படி கேட்டுக் கொள்கிறோம். ஏனெனில், அவர் தான் நம்முடைய கோரிக்கைகளே அவதாரமாகத் தோன்றிய புண்ணிய புருஷர்.

இந்தச் சமயத்தில் நாம் நம்முடைய கடமை தவறி நடந்து நம்முடைய எதிரிகள் நம் கழுத்தை நெரிக்க இடம் கொடுத்துவிடக் கூடாது. நன்றிகெட்டவர்களென நம்முடைய சந்ததிகள் நம்மைக் குறைகூறுவண்ணம் நடந்து கொள்ளுவோமாக !

உங்கள் உண்மையுள்ள

வி. இராஜகோபாலச்சாரியார்,
ஹைகோர்ட்டு வக்கீல், சேலம்
வி. என். வெங்கடப்ப செட்டியார்,
ஹைகோர்ட்டு வக்கீல், சேலம்
ஈ. வி. ராமசாமி நாயக்கர், ஈரோடு.
மீர் பஸ்ஸல் அலி, பாரிஸ்டர், தஞ்சாவூர்.
மகாதேவய்யர், வக்கீல், தஞ்சாவூர்.
ராஜகோபால செட்டியார், தஞ்சாவூர்.
ஜார்ஜ் ஜோஸப், பாரிஸ்டர், மதுரை.
கே. ஸிங்கமய்யங்கார், ஸ்ரீரங்கம்.
டாக்டர் டி. வி. சாமிநாத சாஸ்திரி, திருச்சி.
ஸைத் மூர்த்தாஸா சாஹிப், திருச்சிறுப்பள்ளி.
டி. ஏ. ஆதிநாராயண செட்டியார்,
பாரிஸ்டர், சேலம்.
கே. வி. சுப்பாராவ், பி.ஏ., பி.எல்., சேலம்.
பி. வரதராஜுலு நாயுடு, திருப்பூர்.
டி. ஏ. ராமசந்திர செட்டியார், தஞ்சாவூர்.
பூவராக ஐயங்கார், தஞ்சாவூர்.
வி. ஓ. சிதம்பரம் பிள்ளை, சென்னை.
டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், திருச்சி.
எப். ஜி. நடேசன், திருச்சி.
டி. வி. நரசப்பிள்ளை, திருச்சி.
[''சுதேசமித்திரன்'', 2–7–1918, பக்கம்-7]

# குமாரி அநீதாவின் நடனம்



பம்பாய் ஸ்ரீ ராஜராஜேசுவரி பரத நாட்டிய கலாமந்திரத்தின் ஒரு சிறந்த மாணவி என்று கருதப்படும் குமாரி அநீதா பிள்ளையின் பரதநாட்டிய நிகழ்ச்சி சென்னை பிரம்மகான சபை ஆதரவில் மியூஸிக் அகாடெமியில் நவம்பர் பதினெட்டாந் தேதி யன்று பலர் மெச்சும் வண்ணம் அழகாக நடைபெற்றது. பரதக் கலையை ஆறு, ஏழு ஆண்டுகளாகச் சிறந்த ஆசிரியர்களான குரு மகாலிங்கம் பிள்ளை, கோவிந்தராஜப் பிள்ளை ஆகியோரிடம் ஊக்கத்துடனும், கலைப் பற்றுடனும் பயின்றிருக்கிறார். அநீதாவின் மேடை நிகழ்ச்சியில், விநாயகக் கௌத்துவத்திலிருந்து தில்லானா வரையிலும் நிருத்தங்களும், நடனங்களும், தாளக் கட்டுடனும் வழுவில்லாத அடவு வகைகளுடனும், அப்பழுக்கின்றி அமைந்திருந்தன. நடை பேதங்களும், ஜதிக் கோவைகளும் லய சுத்தத்துடன் ஆடப்பட்டதுடன், அழகு உணர்ச்சியை அநாயாசமாக வெளிக் கொணரக்கூடிய வகையில் ரசிக்கும்படி இருந்தன. கமாஸ் வர்ணம் நடன நிகழ்ச்சிக்கே மகுடம் போல் இருந்தது. அபிநயப் பகுதியும் ஆடல் பகுதிக்குக் குறைந்ததல்ல என்னும்படி இருந்தது. பிற்பகுதியில் ஸ்ரீமதி ஜெயலட்சுமி சீனிவாசனின் பாட்டு காதுக்கு இனிமையும் குளுமையும் அளித்தது. அநீதாவின் தந்தை திரு எஸ். பி. பிள்ளை பிரபல ஃபைஸர் மருந்துக் கம்பெனியின் டைரக்டர். கலைப் பற்றுள்ளவர். குமாரி அநீதா பிள்ளையின் பரதக் கலை மேலும் மேலும் வளர வாய்ப்புக்களும் சூழ்நிலையும் உள்ளன.

# ஹேமர்மாஸ்டர்

## வேக்யூம் ஃப்ளாஸ்குகள்

## பெருமைக்குரிய ஒரு அன்பளிப்பு



வழங்குவதில் பெருமை, வாங்கிக்கொள்வதில் பெருமை, வைத்திருப்பதில் பெருமை. உலகின் அதிகீர்த்தியான வேக்யூம் ஃப்ளாஸ்குகளின், வழிவழி வந்த பண்டைய மரபு ரீதியில் உருவாக்கப்பட்டது — ஹேமர்மாஸ்டர் திரட்டு இந்தப் புகழ்மிக்க அன்பளிப்பு செட்.

சேர்த்தியான வடிவங்களில், கண்ணைக் கவரும் டிசைன்களில் வண்ணமிகு நிறங்களில், வெவ்வேறு கொள்திறன் அளவுகளில் கிடைக்கிறது. தனிப்பட்டவர்களின் தேவைகளுக்கு ஒத்து வரும் வகையில் விலையிடப்பட்டுள்ளது.

நல்ல ஃப்ளாஸ்க் வேண்டுமெனக் கேளுங்கள் —

கிடைக்கும் **ஹேமர்மாஸ்டர்**

AIYARS-HVG 18/72 TM

## உங்கள் குடும்பத்திற்கு
## ஏற்றது
## மிகச்சிறந்ததே!




# கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள் !

கால்கேட் 10க்கு 7 பேர்களில் வாய் துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையேதனி—கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே; வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**

DC.G.49 TH

# இயற்கை காட்டும்



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி
காமகோடி சங்கராசார்ய
ஸ்வாமிகள்

# ஈச்வரதத்துவம்

'எல்லாம் இயற்கைப்படி நடக்கிறது; ஈசன் எதற்கு?' என்கிறார்கள். அந்த இயற்கை நியதியே ஈசனின் இருப்புக்குத்தான் கோடி காட்டுகிறது.

ஸ்ருஷ்டியில் பலவிதமான சக்திகள் பல வேறு வஸ்துக்களிடம் வியாபித்திருக்கின்றன. இயற்கையைப் பார்த்தால் ஒன்றின் சக்தியை விட இன்னொன்றுக்குச் சக்தி அதிகம், அதையும்விட இன்னொன்றுக்கு அதிகம் சக்தி என்கிற ரீதியில் போய்க் கொண்டே இருக்கிறது.

பௌதிகமாக நமக்குக் கொஞ்சம் சக்தி இருக்கிறது. அதனால் நாம் கொஞ்சம் கனம் தூக்குகிறோம். மாடு நம்மை விட அதிகம் கனம் தூக்குகிறது. ஒட்டகம் அதையும் விட அதிக பளு தாங்கும். யானையால் அதற்கும் அதிக கனத்தைத் தூக்க முடிகிறது.

புத்தி பலத்தைப் பார்ப்போம். தாவரங்களைவிடப் புழுவுக்கு அதிக அறிவு இருக்கிறது. புழுவை விட எறும்புக்கு அதிக புத்தி இருக்கிறது. எறும்பைவிட ஆடு மாட்டுக்கு அதிக அறிவு. அவற்றை விட மனிதனுக்குப் புத்தி அதிகம்.

இந்த ரீதியில் யோசித்து ஆராய்ந்து பார்த்தால் இந்த பௌதிக பலம், புத்தி பலம் எல்லாம் பூரணமாக இருக்கிற ஓர் ஆதார வஸ்துவும் இருந்தாக வேண்டும் என்று தெரிகிறது.

அதைத்தான் ஸ்வாமி என்கிறோம்.

நாம் நம் புத்தி பலத்தையும் தேக பலத்தையும் வைத்துக் கொண்டு ஒரு வீட்டைக் கட்டுகிறோம். குருவி தன் புத்தி பலத்தையும் தேக பலத்தையும் வைத்துக் கொண்டு கூட்டைக் கட்டுகிறது. இந்த உலகத்தை எல்லாம் நிர்மாணிக்கிற சக்தி கொண்ட ஒன்று இருக்கிறதல்லவா? அதுதான் ஸ்வாமி.

ஒன்றிலிருந்து ஒன்றாகச் சக்தி அதிகமாகிக் கொண்டே போகிற இயற்கையிலிருந்து இப்படி ஈசுவர தத்துவத்துக்குப் போகிறோம்.

ஒன்றுக்கு ஒன்று மாறாக, Pair of opposites என்கிற எதிரெதிர்ச் சக்தி ஜோடிகளையும் நாம் இயற்கையில் பார்க்கிறோம். கடும் பனிக் காலம் என்று ஒன்று இருந்தால் கடும் வெயில் காலம் ஒன்று இருக்கிறது. இரவு என்று ஒன்று இருந்தால் பகல் என்பதாக ஒன்று இருக்கிறது. மிருதுவான புஷ்பங்கள் இருப்பது போல் கூரான முட்கள் இருக்கின்றன. தித்திப்புக்கு மாறாகக் கசப்பு இருக்கிறது. அன்புக்கு எதிராக துவேஷம் இருக்கிறது. எதற்கும் எதிர் வெட்டாக ஒரு மாற்று இயற்கையில் இருக்கிறது. இந்த ரீதியில் ஆலோசனை செய்தால் மனித மனசுக்கு மாற்றாகவும் ஒன்று இருக்கத் தானே வேண்டும்? மனித மனத்தின் சுபாவம் என்ன? ஆசாபாசங்களில் மாறி மாறிச் சஞ்சலித்துக்கொண்டே இருப்பது, திருப்தியே இல்லாமல் தவிப்பது. இதற்கு மாறாக ஆசாபாசமின்றி, சஞ்சலமே இன்றி, சாசுவத சாந்தமாகவும் சௌக்கியமாகவும் திருப்தியாகவும் இருக்கிற வஸ்துவும் இருக்கத்தான் வேண்டும். அப்படிப்பட்ட வஸ்துதான் ஸ்வாமி.

இயற்கையில் சகலமும் மாறிக் கொண்டிருக்கிறது. சில மாறுதல்கள்மட்டும் நம் கண்ணுக்குத் தெரிகின்றன. ஆனால் நாம் மாறாதது என நினைக்கிற மலையும், சமுத்திரமும் கூட காலக்கிரமத்தில் மாறிக் கொண்டேதான் இருக்கின்றன. இயற்கையில் எதுவுமே சாசுவதம் இல்லை. இதற்கு எதிராக மாறுமலே ஒன்று இருக்க வேண்டும். அதுதான் ஸ்வாமி.

இயற்கையில் படிப்படியாக ஒன்றிலிருந்து இன்னொன்று என்றும், அதே இயற்கையில் எந்த ஒன்றுக்கும் மாறுதல் உண்டு என்றும் அம்பாள் காட்டி, இந்த இரண்டாலும் கடைசியில் பரமாத்ம தத்துவம் ஒன்று இருந்தாக வேண்டும் என்று உணர்த்துகிறாள்.

அது இருந்துவிட்டுப் போகட்டுமே, அதை எதற்கு உபாசிக்க வேண்டும் என்று கேட்கலாம். நாம் எப்படி இருக்கிறோம்? எப்போதும் எல்லையில்லாத தேவைகளோடு இருக்கிறோம். பரமாத்மா ஒரு தேவையும் இல்லாமல் இருக்கிறார். இத்தனை தேவையுள்ள நாம் அற்ப சக்தியோடு இருக்கிறோம். ஒரு தேவையும் இல்லாத பரமாத்மா சர்வ சக்தியோடு இருக்கிறார். நாம் ஒரே பள்ளமாக இருக்கிறோம். அவர் பரம உன்னதமாக இருக்கிறார். அவர் சக்தியிலும் ஞானத்திலும் மட்டும் உயர்ந்தவர் என்பதில்லை. தயையிலும் உயர்ந்தவராக இருக்கிறார். அதனால்தான் அவரைத் தியானித்தால் பள்ளமாக இருக்கிற நம்மையும் தூர்த்து நிறைவாகச் செய்கிறார். நாம் குறைந்தவர்கள், அவர் நிறைந்தவர். நம் குறையைத் தீர்த்து நிறைவாகச் செய்கிற கருணாமூர்த்தி அவர். நாம் உபாசித்தால் நம் குறைகளைப் போக்குகிறார்.

குறை இருக்கிறது என்றால் எதுவோ தேவைப்படுகிறது என்று அர்த்தம். தேவையே இல்லாவிட்டால் நிறைந்து விடலாம். நம் குறைகளை நிவிருத்தி செய்கிற பரமாத்மா கடைசியில் நமக்கு எதுவும் தேவையே இல்லை என்கிற நிறைவையும் தந்துவிடுவார். அப்போது அந்த உயர்ந்த மேடு நம்மைத் தூர்த்துத் தூர்த்துப் பள்ளமாயிருந்த நாமும் அதோடு அதாகவே சமமாக நிற்போம்.







### 'கற்றதனாலாய பயன் என்கொல்?'

படிப்பும் புலமையும் வேறு; படித்த படிப்புடன் பக்தியும் கலந்து மெய்யுணர்வாவது வேறு.

ஆண்டவன் சந்நிதானத்தில் படிப்பும் மேதையும் எம்மாத்திரம்? அங்கே ஊமையும் பேசும்; கபோதிகளுக்கும் கண் தெரியும்; சாஸ்திரங்கள் எல்லாம் படித்தவனும் படிப்பே இல்லாதவனும் ஆண்டவனுக்குமுன் ஒன்றே.



### 'ஒழுக்கம் விழுப்பம் தரலான்'

ஒழுக்கத்தைச் செல்வமாகக் கருத வேண்டும். நாட்டில் மீண்டும் பக்தி மலர்ந்து வருவதை நான் பார்க்கிறேன். பக்தி பலம் தரும்.

ஒழுக்கமாக நடந்து, கஷ்டப்பட்டு உழைத்தால் எவ்விதப் பற்றாக்குறையும் ஏற்படாது. தமிழ் மக்கள் நுண்ணறிவு படைத்தவர்கள். அவர்கள் பிரச்னைகளைத் தீர்ப்பார்கள் என்பதில் எனக்கு நம்பிக்கையுண்டு. மாலை போடுவதுடன் வேலை முடிந்துவிட்டதாக நினைக்காமல் இளைஞர்கள் தேச நிர்மாணத்தில் தங்கள் பொறுப்பை உணர்ந்து கஷ்டப்பட்டுப் பாடுபடுமாறு கேட்டுக் கொள்கிறேன்.



### 'உன்னுவதெல்லாம் உயர்வுள்ளல்'

நல்ல காரியங்களைச் செய்வதிலும் பெரிய விஷயங்களைச் சாதிப்பதிலும் மனத்தைச் செலுத்துங்கள். நமது நடத்தைகளை நமது சந்ததியார் பிரதிபலிப்பார்கள். இன்று நாம் செய்யும் காரியம் எதிர்காலத்தில் நமது குழந்தைகளைப் பாதிக்கக் கூடும். இதை மறந்துவிடக் கூடாது. அதை மனத்தில் வைத்து நாம் இப்போது உறுதியுடனும், தைரியத்துடனும் நடந்துகொள்ள வேண்டும். கெட்ட எண்ணங்களுக்கு அறவே இடமளிக்கக் கூடாது. நமது தரமும், ஒழுக்கமும், நடத்தையும் உயர்ந்ததாக இருப்பது அவசியம். குழந்தைகள் கெட்டுப் போக நாம் வழிகாட்டியாக இருக்கக் கூடாது.



### 'முயற்சி திருவினையாக்கும்'

நாம் கஷ்டப்பட்டு மனச்சாட்சிக்கு நியாயமாகப் பக்தி சிரத்தையுடன் உழைத்தாலன்றி வெற்றி பெற முடியாது. ஆசை இருந்தால் மட்டும் போதாது. லட்சியத்தில் பக்தி வேண்டும். பெரும் முயற்சிகள் அனைத்துக்கும் சிரத்தை தேவை.



### 'செயற்கரிய செய்வார் பெரியர்'

முன்னெல்லாம் சிறியதாக எதையுமே செய்ததில்லை. அஜந்தா, புத்த கயா, மைசூர் குகைக் கோயில்களைப் பாருங்கள். முன்னெல்லாம் மனம் விரிவாக இருந்தது. அவகாசமும் வேலை செய்யும் சக்தியும் இருந்தன. இப்பொழுது நாம் ரொம்பச் சுறுசுறுப்பாயிருக்கிறோம்; ஆனால் செய்வதென்னவோ ஒன்றுமில்லை. செய்ய முயற்சி செய்கிறோம்; ஆனால் சாதனை சிறியதாயிருக்கிறது.

# குறள் மணிகளோடு ராஜாஜி மணிமொழிகள்

### 'சமன் செய்து சீர்தூக்குங் கோல்போல்'

நிர்வாகம் நல்லதாக இருந்தால் யார் மந்திரியாக வந்தால் என்ன? மந்திரிகள் வருவார்கள், போவார்கள். ஆனால் நிர்வாகத்தினர் நல்ல வேலை செய்தால் மக்கள் நல்ல மகிழ்ச்சி அடைவார்கள். இளார்க்குகளாகட்டும், சூப்பிரண்டுகளாகட்டும், காரியதரிசிகளாகட்டும், அனைவரும் பயமோ பாரபட்சமோ இன்றி ஹைகோர்ட் நீதிபதிகளைப் போல் வேலைகளைச் செய்ய வேண்டும்.



### 'அடக்கம் அமரருள் உய்க்கும்'

அடக்கம் ஒரு சாதனம் மட்டும் அல்ல. உண்மையில் நாமும் நம்முடைய செல்வமோ அறிவோ மற்ற பாக்கியமோ எம்மாத்திரம்? ஒன்றுமில்லை. அஞ்ஞானத்தினின்றும் விலகினோமானால் உண்மையே அடக்கத்தைத் தரும்.

தொகுப்பு: வி. ச. வாசுதேவன்





# ரேடியோவின் சிறந்த கட்டங்களுக்கு

# எஸ்ட்ரெலா வின் சிறந்த ரேடியோ பாட்டரிகள்

நீங்கள் விரும்பும் இன்னிசையை நாதச் செழுமையோடு நிறைவுடனே ஒலித்திடச் செய்வது கூடுதலான சக்திசெறிந்த எஸ்ட்ரெலா பேட்டரிகள். காகித, பிளாஸ்டிக், உலோகக் கவச உறைகளிட்ட பேட்டரி வகைகள் உள்ளன நீங்கள் தேர்ந்தெடுக்க. கசியாத் தன்மை உடையவை. அவை நெடுங்காலம் உழைப்பவை. டார்ச்சுகளுக்கும் இவையே சிறந்தவை, ஓங்கிய ஒளியையும் நம்பிக்கையான உழைப்பையும் தருபவை.






**எஸ்ட்ரெலா**
பேட்டரிகள்
அதிக சக்தி அதிக உபயோகம்

எஸ்ட்ரெலா பேட்டரீஸ்
லிமிடெட், பம்பாய்-19.

FOCUS-J.B. (G) TH.

# அலை ஓசை

அமரர் கல்கி

## 19. இது என்ன உலகம்?

மறுநாள் பிற்பகலில் சௌந்தரராகவன் மாஜி திவான் ஆதிவராகாச்சாரியார் வீட்டுக்கு வந்தபோது அவனுடைய முகத்தில் சோகம் குடிகொண்டிருந்தது. பல நாட்கள் கவலைப்பட்டு இராத் தூக்கமின்றிக் கண் விழித்ததினால் ஏற்படக் கூடிய சோர்வு அவனுடைய முக பாவத்திலும் குழி விழுந்த கண்களிலும் பிரதிபலித்தது.

''என்ன ஸார்! உங்களைப் பார்த்தால் பெண்டாட்டியைப் பறிகொடுத்தவன் மாதிரி இருக்கிறதே!'' என்று கூறிப் பாமா ராகவனை வரவேற்றாள்.

சுருக்கென்று கூரிய ஊசியினால் உடம்பிலே எங்கேனும் குத்தினால் முகம் எப்படிச் சுருங்குமோ, அப்படி ராகவனுடைய முகம் சுருங்கிப் பொறுக்க முடியாத வேதனையைக் காட்டியது.

''நீங்கள்கூட இப்படி அநுதாபம் இல்லாமல் பேசுவீர்கள் என்று நான் நினைக்கவேயில்லை. நான் போய் வருகிறேன்!'' என்று அழமாட்டாக் குறையாகச் சொல்லிவிட்டு ராகவன் திரும்பிப் போக யத்தனித்தான்.

அப்பொழுது தாமா எழுந்து வந்து ராகவனுக்கு முன்னால் நின்று மறித்துக் கொண்டு, ''அவள் கிடக்கிறாள், ஸார்! பாமாவுக்கு நாக்கிலே விஷம்! எல்லாரையும் விரட்டியடிப்பதுதான் அவளுடைய வேலை. அதனால்தான்..'' என்று ஆரம்பித்தவள் தயங்கி வாக்கியத்தை நடுவில் நிறுத்திவிட்டு, ''நீங்கள் வந்து உட்காருங்கள். உங்களிடம் எங்களைப் போல் அநுதாபம் உள்ள சிநேகிதர்கள் இந்த டில்லியில் யாரும் இல்லை என்பது உங்களுக்குத் தெரிந்த விஷயம்தானே?'' என்று சொன்னாள்.

ராகவன் திரும்பிப் போகும் உத்தேசத்தைக் கைவிட்டுச் சோபாவில் உட்கார்ந்தான். ''டில்லியில் மட்டும் என்ன? வேறு எங்கேயும் எனக்குச் சிநேகிதர்கள் கிடையாது. உத்தியோக சிநேகிதம் ரயில் சிநேகிதத்தைவிட மோசமானது. நல்ல நிலைமையில் இருக்கும் வரையில் எல்லோரும் பிராண சிநேகிதர்கள்போல் நடிப்பார்கள். தங்கள் காரியம் ஆவதற்காக நம்மைச் சுற்றிக் கொண்டே இருப்பார்கள். ஏதாவது கொஞ்சம் கஷ்டம் வந்து விட்டால் எல்லோரும் கையை விரித்து விடுவார்கள். முழுகுகிற கப்பலிலிருந்து எலிகள் ஓடுவது போல் ஓடிப் போய் விடுவார்கள். நீங்களும் உங்கள் தகப்பனாரும் அதற்கு விதிவிலக்கு என்றும், நீங்கள் என்னுடைய உண்மையான சிநேகிதர்கள் என்றும் நம்பியிருக்கிறேன். நல்லதோ, கெட்டதோ, உங்கள் தகப்பனாரிடம் சொல்லி யோசனை கேட்டால் மனம் நிம்மதி அடைகிறது. இப்போது அப்பா எங்கே?'' என்றான்.

''அப்பாவின் சிநேகிதர் பாங்கர் கஜான்ஜியாவை உங்களுக்குத் தெரியுமல்லவா? அவரும் இன்னும் சிலரும் இன்றைக்கு ஒரு புதிய இன்ஷியூரன்ஸ் கம்பெனி ஆரம்பிக்கிறார்கள். அதற்காக அப்பா போயிருக்கிறார். புதிய கம்பெனியில் அப்பாவும் ஒரு டைரக்டர்'' என்றாள் தாமா.

''சில பேர்களுக்குத் திடீரென்று யோகம் பிறந்து விடுகிறது. இந்தக் கஜான்ஜியா ஐந்து வருஷங்களுக்கு முன்னால் சாதாரண மனிதராக இருந்தார். இப்போது ஐந்தாறு கோடி ரூபாய் சம்பாதித்து விட்டதாகச் சொல்லுகிறார்கள். இத்தனைக்கும் ஆசாமிக்கு இங்கிலீஷில் கையெழுத்துப் போடக் கூடத் தெரியாது. என்னைப் போல் எத்தனையோ பேர் 'எகனாமிக்ஸ்' படித்

துப் பட்டம் பெற்று விட்டு வாழ்நாள் எல்லாம் மாதச் சம்பளம் வாங்கிக் கொண்டு காலம் கழிக்கிறார்கள். இவ்வளவு இலட்சணமான உத்தியோகத்துக்கும், மேலே உள்ள மூடர்கள் எப்போது சீட்டுக் கிழிப்பார்களோ என்று பயந்து நடக்க வேண்டியிருக்கிறது. இன்றைக்கு எனக்கு அவ்விதம் நேர்ந்துவிட்டது!'' என்று சொன்னான் சௌந்தரராகவன்.

''என்ன என்ன?'' ''சீட்டுக் கிழித்து விட்டார்களா?'' ''உத்தியோகம் போய் விட்டதா?'' ''எதற்காக?'' ''அக்கிரமமாக இருக்கிறதே!'' என்று தாமாவும் பாமாவும் மாற்றி மாற்றிப் பொழிந்தார்கள்.

''இன்னும் வேலை அடியோடு போய் விடவில்லை. விசாரணை முடியும்வரையில் 'ஸஸ்பெண்டு' செய்திருக்கிறார்கள்....ஆனால் அவர்கள் திரும்ப எடுத்துக் கொண்டாலும் எனக்கு வேலைக்குத் திரும்பிப் போகும் உத்தேசம் இல்லை. வெகு நாட்களாக வேறு உத்தியோகத்துக்குச் சிபாரிசு செய்யும்படி அப்பாவைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். அதற்கு இதுதான் சமயம். அப்பா இந்தச் சமயம் எனக்கு உதவி செய்தே ஆகவேண்டும். இல்லாவிட்டால் வேறு வழியில்லை.''

''அப்பாவுக்கு அதில் கஷ்டம் ஒன்றுமிராது. கஜான்ஜியாவின் பாங்கிலோ இன்ஷியூரன்ஸ் கம்பெனியிலோ பேஷாக உங்களுக்கு வேலை போட்டுத் தரச் சொல்லுவார். உங்கள் விஷயத்தில் அப்பாவுக்கு ரொம்ப அபிமானமும் சிரத்தையும் உண்டு என்றுதான் உங்களுக்குத் தெரியுமே? ஆகையால் உத்தியோகத்தைப் பற்றி நீங்கள் கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். ஆனால் நடந்ததை யெல்லாம் தயவுசெய்து விவரமாகச் சொல்லுங்கள். என்ன காரணத்துக்காக உங்களை 'ஸஸ்பெண்டு' செய்தார்களாம்? விசாரணை எதற்கு?'' என்று தாமா கேட்டாள்.

அப்போது பாமா, ''இதையெல்லாம் கேட்டு அவரை ஏன் தொந்தரவு செய்கிறாய்? பாவம்! அவர் சம்சாரத்தைப் பறி கொடுத்து விட்டு அதைப்பற்றிப் பேசிப் புலம்புவதற்காக வந்திருக்கிறார்!'' என்றாள்.

''சீ! நீ சும்மா இரு! — அவள் கிடக்கிறாள், நீங்கள் சொல்லுங்கள் ஸார்!'' என்றாள் தாமா.

''இன்றைக்கு நான் ஆபீஸுக்குப் போனதும் இலாகாத் தலைவர் கூப்பிட்டு அனுப்பினார். 'சரி ஏதோ வரப் போகிறது' என்று எண்ணிக் கொண்டு போனேன். அதற்குத் தகுந்தாற்போல், அவரும், 'ராகவன்! உங்களை 'ஸஸ்பெண்டு செய்து வைக்க வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. அதற்காக ரொம்பவும் வருத்தப்படுகிறேன். காரணம் உங்களுக்கே தெரிந்திருக்கக் கூடியதுதான்!' என்றார். 'எனக்குக் காரணம் ஒன்றும் தெரியவில்லை. தயவுசெய்து தாங்களே சொல்லி விட்டால் நல்லது' என்றேன். 'அப்படியானால் சொல்கிறேன். புரட்சிக்காரர்களுக்கு அடிக்கடி உம்முடைய வீட்டில் அடைக்கலம் கொடுத்ததாக உம் பேரில் புகார்' என்றார். 'அது எப்படி என் பேரில் புகார் ஏற்பட முடியும்? புரட்சிக்காரனைப் பற்றி நான்தானே போலீஸுக்குத் தகவல் கொடுத்தேன்??' என்று கேட்டேன். 'மிஸ்டர் ராகவன்! நீர் மிக்க அறிவாளி!' என்றார் இலாகாத் தலைவர். 'உங்கள் நற்சாட்சிப் பத்திரத்துக்காக மிக்க வந்தனம்' என்றேன். 'எனக்கு வந்தனம் தேவையில்லை. நீர் மிக்க அறிவாளியாகையால் விசாரணையின் போது இதை ஒருகாரணமாகச் சொல்ல வேண்டாம். அந்தப் புரட்சிக்காரப் பையனைப் பற்றிப் போலீஸார் தகவல் அறிந்து கைதுசெய்வதற்காகத் தயாராகவே இருந்தார்கள். அந்தச் சமயத்தில் நீர் தகவல் கொடுத்தினால் என்ன பிரயோசனம்? தப்பித்துக் கொள்வதற்காகக் கடைசி நேரத்தில் தகவல் கொடுத்ததாகவே ஏற்படும்!' என்றார். இதைக்கேட்டு



நான் திகைத்துப் போனேன். முதலில் இன்னது சொல்வதென்று தெரியவில்லை. கார்டினல் உல்ஸி மரண தண்டனைக்கு ஆளானபோது சொன்னது நினைவு வந்தது. 'என்னுடைய அரசருக்கு நான் செய்த சேவையை என் ஆண்டவனுக்குச் செய்திருந்தால் இந்தக் கதியை அடைந்திருக்க மாட்டேன்!' என்று உல்ஸி சொன்ன வாக்கியத்தை நானும் சொன்னேன். 'உம்முடைய அரசருக்கு நீர் உண்மையாகச் சேவை செய்யவில்லை என்பதுதான் உம்பேரில் புகார். தெரிகிறதா? சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், அதிலும் புதுடில்லி செகரடேரியட்டில் வேலை பார்ப்பவர்கள், ஸீஸருடைய மனைவியைப் போல் சந்தேகத்துக்கு இடம் கொடாதவர்களாக இருக்க வேண்டும். இது யுத்த காலம் என்பது உமக்கு நினைவில் இருக்கிறதல்லவா? யுத்தத்திலும் மிக நெருக்கடியான கட்டத்தில் இருக்கிறோம். இதை உத்தேசித்துத்தான் இத்தனை காலமும் இல்லாத வழக்கமாக ஒரு ராணுவ தளபதியை இந்தியாவின் வைஸ்ராயாய் ஆக்கியிருக்கிறார்கள். தளபதி வேவல் இந்தியாவின் வைஸராயாக வந்ததைக் கொண்டு யுத்த நிலைமையின் நெருக்கடியை நீர் ஊகிக்கலாமே?' என்றார். அதற்கு நான், 'ஆம், பேஷாக ஊகிக்கலாம்! இந்த வேவல் எங்கேயாவது எந்த யுத்த களத்திலாவது இருந்தால் கட்டாயம் கோட்டை விட்டுவிடுவார் என்று தானே அவரைப் பிடித்து வைஸராயாகப் போட்டிருக்கிறார்கள்?' என்றேன். ஆபீஸர் சிரித்துவிட்டு, 'இந்த அபிப்பிராயத்தை நாளைக்கு விசாரணை நடக்கும்போது சொல்லலாம். இப்போது போய் வாரும்!' என்றார். 'என் பேரில் என்ன குற்றம்? என்ன சந்தேகம்? — அதைச் சொல்லவில்லையே?' என்று கேட்டேன். 'விசாரணையில் எல்லாம் விவரமாகச் சொல்வார்கள். நான் ஒரு குறிப்பு வேணுமானால் கொடுக்கிறேன். கைது செய்யப்பட்டவனிடம் உம்முடைய கைத் துப்பாக்கி இருந்தது சந்தேகத்துக்கு ஒரு காரணம்' என்றார். 'கைத் துப்பாக்கியை அவன் திருடியிருக்கலாம் அல்லவா?' என்று கேட்டேன். 'திருடியிருக்கலாம். ஆனால் அதற்கு ருசு வேண்டும். சந்தேகத்துக்கு இன்னொரு காரணம், உம்முடைய மனைவி திடீரென்று நேற்று ராத்திரி காணாமற் போனது' என்று ஆபீஸர் சொன்னதும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டுவிட்டது. 'என் மனைவி காணாமற் போனதற்கும் நாம் பேசும் விஷயத்துக்கும் என்ன சம்பந்தம்?' என்று கேட்டேன். அதற்கு ஆபீஸர் சொன்ன பதிலைக் கேட்டதும் என்னுடைய கவலைகள்--கஷ்டங்கள் எல்லாவற்றையும் மறந்து விட்டேன். குபீரென்று சிரித்து விட்டேன். அதை நினைத்தால் இப்போது



கூட எனக்குச் சிரிப்பு வருகிறது!'' என்று சொல்லி விட்டு ராகவன் முகத்தில் அசடு வழிய, பலவீனமான சிரிப்பு ஒன்று சிரித்தான்.

'' அப்படிச் சிரிக்கும்படியாக உங்களுடைய இலாகாத் தலைவர் என்னதான் சொன்னார்? சர்க்கார் உத்தியோகஸ்தர்களிலே அவ்வளவு நகைச்சுவை உடையவர்கள்கூட இருக்கிறார்களா?'' என்று பாமா கேட்டாள்.

''அவர் அப்படி நகைச்சுவை உடையவர் அல்ல; ஹாஸ்ய உணர்ச்சியுடனும் பேசவில்லை. ஆனால் அவர் சொன்னது அவ்வளவு விசித்திர விஷயமாயிருந்தபடியால்தான் சிரித்தேன். சீதாவும் ஒரு புரட்சிக்காரியாம். அவளும் சூரியாவும் சதி செய்து சட்டவிரோதமான பல காரியங்களைச் செய்து வந்தார்களாம். இந்தியத் துருப்புகளின் போக்குவரவைப் பற்றி இரகசிய ரேடியோ மூலம் சத்துரு தேசங்களுக்குத் தகவல் கொடுத்து வந்தார்களாம். நானும் அவர்களுக்கு உடந்தையாம். போலீஸுக்குத் தகவல் சொல்வது போலச் சொல்லிவிட்டு, அவர்களுக்கும் எச்சரிக்கை செய்து தப்பித்துக் கொள்ளும்படி செய்து விட்டேனாம். சீதா மட்டும் எங்கேயோ போய்ப் பதுங்கிக் கொண்டிருக்கிறாளாம். எப்படி இருக்கிறது கதை?''

''கதைக்கு என்ன? நன்றாய்த்தான் இருக்கிறது. ஒரு நாள் திடீரென்று போலீஸார் இந்த வீட்டுக்கு வந்து சோதனை போட்டாலும் போடுவார்கள். சீதா இங்கே ஒளிந்துகொண்டிருக்கிறாளோ என்று பார்ப்பதற்கு!''

''என்ன மூடத்தனம்! புதுடில்லிப் போலீஸார் எதை வேணுமானாலும் நம்பி விடுவார்கள் போலிருக்கிறது.''

'' சொல்லுகிறவர்கள் பக்குவமாய்ச் சொன்னால், கேட்பவர்கள் நம்புவதற்கு என்ன? ஏற்கனவே போலீஸார் வெறும் வாயை மெல்லுகிறவர்கள் ; அவர்களுக்கு ஒரு பிடி அவலும் கிடைத்து விட்டால் ?''

''பாமா! மறுபடியும் ஏதோ மர்மமாகப் பேசுகிறீர்களே? பக்குவமாக யார் என்னத்தைச் சொல்லி யிருக்க முடியும்?'' என்று ராகவன் கேட்டான்.

''ராகவன் ! இது விஷயமாக உங்களுக்கு ஒன்றும் சந்தேகமே உதிக்கவில்லையா? உங்கள் மனைவியையும் அந்த வாலிபனையும் பற்றிப் போலீசுக்கு யாராவது உளவு சொல்லியிருக்க வேணும் என்று தோன்றவில்லையா ? நீங்களும் அவர்களுக்கு உடந்தை என்றுகூடச் சொல்லியிருக்க வேணும். இல்லாத வரையில் உங்கள் பேரில் இவ்வளவு சந்தேகப்பட்டு நடவடிக்கை எடுத்திருக்க மாட்டார்கள்.''

''கடவுளே! இப்படியும் இருக்க முடியுமா? யார் அந்த மாதிரி பொய் உளவு கொடுத்திருப்பார்கள்?''

''நேற்று மாலை நடந்த டின்னர் பார்ட்டியில் யாரோடு கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருந்தீர்கள் ? அவளாயிருக்கலாம் அல்லவா ? உங்களுடைய குடும்பத்தின் அந்தரங்க விவகாரங்கள் வேறு யாருக்குத் தெரியும்? வேறு யார் அப்படி நம்பிக்கை ஏற்படும்படி சொல்லியிருக்க முடியும்?''

''தாரிணியையா சொல்லுகிறீர்கள்? அழகா யிருக்கிறது! முந்தா நாள் அவளைப் புரட்சிக்காரி என்றீர்கள். இன்றைக்கு அவள் எங்களைப் பற்றி உளவு சொல்லியிருப்பாள் என்கிறீர்கள். இது என்ன வேடிக்கை ?''

''வேடிக்கை ஒன்றுமில்லை. உங்கள் ஆபீஸர் சொன்னதுபோல் நீங்கள் அறிவாளிதான். ஆனால் சிற்சில விஷயங்களில் நீங்கள் பச்சைக் குழந்தைபோல் உலகமே தெரியாதவரா யிருக்கிறீர்கள். நான் முந்தா நாள் சொன்னதற்கும் இன்று சொல்வதற்கும் வித்தியாசம் ஒன்றும் இல்லை. புரட்சிக்காரர்களுக்கு மத்தியில் தாரிணி புரட்சிக்காரிதான். அப்படி நடித்தால்தானே புரட்சி இயக்கத்தைப் பற்றிய உளவுகளைச் சேகரித்துச் சர்க்காருக்குச் சொல்ல முடியும்?''

''தாரிணியைச் சர்க்காருக்காக ஒற்று வேலை செய்கிறவள் என்றும், பொய்க்குற்றம் சாட்டுகிறவள் என்றுமா சொல்லுகிறீர்கள்? ஐயோ! இது என்ன உலகம் ?''

இப்படி ராகவனுடைய வாய் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவனுடைய மனம், தாரிணியைப் பற்றிய உண்மை அப்படி இருந்தாலும் இருக்கலாம் என்று எண்ணியது. இல்லாவிட்டால் அவ்வளவு பெரிய சர்க்கார் பதவியில் உள்ளவர்களிடம் அவளுக்கு எப்படி அத்தனை செல்வாக்கு இருக்க முடியும்? அவர்களுடன் அவ்வளவு சர்வ கலபமாக எப்படிக் கலந்து பழக முடியும்?— என்னும் ஐயங்கள் உதித்தன.

''இது என்ன உலகம்?'' என்ற ராகவனுடைய கேள்விக்குப் பதிலாகப் பாமா, ''இது மிக மோசமான உலகம். பொய்யும் சூதும் மோசமும் தந்திரமும் நிறைந்த உலகம் இந்த உலகத்தில் உங்களைப்போல் சாதுக்கள் சிலரும் இருக்

# பனிக் கால சரும வரட்சியா?
# உங்களுக்கு உள்ள இப் பிரச்சினை
# ரோம், லண்டன், பாரிஸ்
# நங்கையருக்கும் உண்டு

## அவர்கள் கண்ட வழியே உமக்கும் உசிதம்




புத்தழகுக்
கோலமுடன்
வருகுது

# பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்

## உமது சருமத்தை மென்மையாக்கிப் பாதுகாக்கும்

குளிர் நாட்களிலே வரண்டிடும் சரும மென்மையைக் குழைவுடனே உமக்கு மீட்டுத் தருவது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்: உலகெங்குமே அரம்பையர் விரும்பும் அழகுசாதனம் இயற்கை எவ்வாறு செயல்படுகிறதோ அதே முறையில்



உமது சருமத்தைப் பேணிக் காப்பது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம். வாடாமலரென மென்மையோடு மிளிரத் தேவைப்படும் சருமத் தைலங்களை மீட்டுத் தருகிறது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம். இட்டுப் பயனடைவீர் இன்றிரவே!

## உலகிலேயே உச்ச விற்பனை உடைய கோல்டு க்ரீம்: பாண்ட்ஸ்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்க்., (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் அமெரிக்காவிலே இணைக்கப்பட்டது.)

லின்டாஸ்- CPC. 2-140 TM.




12384 TH

# டோஷிபா ஆனந்த்

பவர் கிங்
பேட்டரி ஒன்றே
முழுச்சக்திக்கு
உத்தரவாதம்
அளிப்பது.

காரணம் மின் சக்தியைக் காக்கும்
மேலுறையோடு கூடியது
இது ஒன்றே.



## தீராத வியாதிகளுக்கு சிறந்த சித்த வைத்தியம்



தவறான பழக்கத்தினால் இல்லற வாழ்க்கையில் திருப்தி இல்லாத நிலைமை, மலட்டுத் தன்மை, களைப்பு, உப்புசம், தோல் சம்பந்தப்பட்ட வியாதிகள் வயிற்றுவலி, காது மந்தம், முதலியவைகளுக்குத் தபால் மூலம் சிகிச்சை அளிக்கப்படும்.

**ஸ்ரீ பாலாஜி வைத்தியசாலை**

டாக்டர்
பி. குமாரஸ்வாமி தேவரா
தெனலி (A. P.) போன்: 551

சென்னை கிளை

9-D. சிவாஜி தெரு.
தி. நகர், சென்னை-17

PABV-11



# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான
**ஹெடன்ஸா**
களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

Bensons-2141 TAM

கிறார்கள். போகட்டும்; தங்கள் மனைவியின் விஷயம் என்னதான் ஆயிற்று? அதைப் பற்றி ஏதாவது தகவல் தெரிந்ததா?'' என்று வினவினாள்.

''ஒன்றும் தெரியவில்லை. இதில் ஒரு துயரகரமான தமாஷ் சேர்ந்திருக்கிறது. நேற்று ராத்திரி நான் உங்களிடம்கூடச் சொன்னேனே? இனிமேல் என் வாழ்க்கையையே புதிய முறையில் தொடங்குவது என்றும் சீதாவுடன் மனம் ஒத்த இல்லறம் நடத்துவது என்றும் தீர்மானித்திருந்தேன். அவ்விதம் தீர்மானித்துக் கொண்டு வீட்டுக்குப் போய்ப் பார்த்தால், அவளைக் காணவே காணோம்! இதற்கு என்ன சொல்வது?'' என்றான் சௌந்தர ராகவன்.

''அற்ப மானிடர்களாகிய நம்முடைய உத்தேசத்துக்கெல்லாம் மேலாக விதி என்று ஒன்று இருக்கிறதல்லவா? அந்த விதி ஜயித்துவிட்டது!'' என்றாள் தாமா.

''நான் அப்படி விதியின் மேல் பழியைப் போட மாட்டேன். சாதுவாகிய சௌந்தரராகவனின் நல்ல உத்தேசத்தை ஒரு பெண்ணின் துர்மதி ஜயித்துவிட்டது என்று சொல்வேன்'' என்றாள் பாமா.

''நீ கொஞ்சம் வாயை மூடிக் கொண்டிரு! தெரிகிறதா?'' என்று தாமா அதட்டிவிட்டு, ''ஏன் ஸார்! சீதாவைப் பற்றி ஒன்றுமே தகவல் இல்லையென்று சொல்கிறீர்கள்? கைது செய்யப்பட்ட சூரியாவிடமிருந்து விவரம் ஒன்றும் கிடைக்கவில்லையா? போலீஸ் இன்ஸ்பெக்டர் உங்களுக்குத் தெரிந்த சிநேகிதர் ஆயிற்றே?'' என்று கேட்டாள்.

''தெரிந்த சிநேகிதர்தான்! முன்னொரு சமயம் எனக்குப் பெரிய உதவி செய்திருக்கிறார். இப்பொழுதும் அவரையே நம்பிக் கொண்டிருக்கிறேன். இந்த ஊரிலே சூரியாவின் விசாரணை பகிரங்கமாக நடந்தால் என் மானம் போய் விடும். நாகபுரிக்கு அனுப்பி விடுங்கள் என்று கேட்டதற்கு ஒப்புக் கொண்டிருக்கிறார். என் பேரில் அந்தரங்க விசாரணை நடந்தால் என் பக்கம் பேசுவதாகவும் சொல்லி யிருக்கிறார். ஆனால் சீதாவைப் பற்றி ஒன்றும் அவரால் இதுவரை கண்டுபிடிக்க முடியவில்லை. சூரியாவின் மண்டையில் பட்ட அடியினால் அவன் இன்னும் நல்ல அறிவு வராமல் கிடக்கிறான். மயக்கத்தில் பேசுகிறபோது, 'சீதா! சீதா!' 'ஆபத்து வந்துவிட்டது!' 'பிடித்துவிட்டார்கள்!' என்று உளறுகிறான். அவன் ஏறியிருந்த டாக்ஸி டிரைவரிடம் என்னை அழைத்துப் போய் என் முன்னிலையில் விசாரித்தார். அவன் கூறிய விவரம் விசித்திரமா யிருக்கிறது. ஷாஜஹானுபாத் வெள்ளி வீதியில் ஒரு வாலிபனும் ஒரு பெண்ணும் வண்டியில் ஏறிக் கொண்டார்களாம். ஜந்தர்மந்தர் சாலைக்கு வந்ததும் அந்தப் பெண் வண்டியிலிருந்து இறங்கி நடந்தாளாம். கொஞ்ச தூரம் போவதற்குள் இன்னொரு கார் வந்து அவள் பக்கத்தில் நின்றதாம். அந்தப் பெண்ணைப் பலவந்தமாக ஏற்றிக் கொண்டு கார் விரைவாகச் சென்றதாம். சூரியா சொன்னதின் பேரில் இந்த டாக்ஸி டிரைவரும் பின் தொடர்ந்து வண்டியை விட்டானாம். ஆனால் யமுனைப் பாலத்தில் அந்த வண்டி போனபிறகு இந்த டாக்ஸியை நிறுத்தி விட்டார்களாம். உடனே போலீஸ் வண்டி வந்து பிடித்துக் கொண்டது என்று சொல்கிறான். அவன் சொல்லும் சில அடையாளங்களிலிருந்து பலவந்தமாகப் பிடித்துக் கொண்டு போகப்பட்டவள் சீதாவா யிருக்கலாம் என்று எண்ண இடம் இருக்கிறது. ஆனால் இந்தப் புது டில்லியில் 1943ம் வருஷத்தில் இப்படி யெல்லாம் நடக்குமா என்று எண்ணும்போது நம்பிக்கைப்படவில்லை. மேலும் சீதாவை அப்படி யார் எதற்காகப் பிடித்துக் கொண்டு போக வேண்டும்? இதை யெல்லாம் நினைக்க நினைக்கத் தலை சுற்றுகிறது!'' என்றான் ராகவன்.

''ஆமாம்; முன்னால் போன வண்டியைப் பற்றித் தகவல் கண்டுபிடிக்கப் போலீஸார் முயற்சி எதுவும் செய்யவில்லையா?'' என்று பாமா கேட்டாள்.

''செய்தார்கள். நாலாபுறமும் தந்தி கொடுத்து டெலிபோன் செய்து குறிப்பிட்ட வண்டி வந்தால் நிறுத்தும்படி சொல்லி யிருந்தார்கள். டாக்ஸி டிரைவர் முன்னால் சென்ற காரின் நம்பர் கொடுத்திருந்தான். அந்தக் கார் இங்கிருந்து நூறாவது மைலில் தடுத்து நிறுத்தப்பட்டது. ஆனால் அதில் பெண் ஒருவரும் இல்லை என்று தகவல் வந்திருக்கிறது. போலீஸ் இன்ஸ்பெக்டர் இன்று காலையில் என்னை டெலிபோனில் கூப்பிட்டுச் சொன்னார்!''

''ஆகவே உங்கள் மனைவி சீதா போனவள் போனவள்தான்! மிஸ்டர் ராகவன்! உங்களுக்கு என் மனமார்ந்த அநுதாபம்!'' என்றாள் பாமா.

''எனக்கு இவரிடம் கொஞ்சம்கூட அநுதாபம் இல்லை. ஊரெல்லாம் பேசிக் கொண்டிருந்த விஷயத்தை இவர் அறிந்து கொள்ளாமல் கண்கள் திறந்திருந்தும் குருடரா யிருந்தார் அல்

லவா? இவருக்கு இது நன்றாய் வேணும்!'' என்றாள் தாமா.

''எது விஷயத்தில் நான் குருடனாய்ப் போனேன்? ஊரெல்லாம் என்ன பேசிக் கொண்டார்கள்?'' என்று கேட்டான் சௌந்தர ராகவன்.

''அதை வேறு விண்டு சொல்ல வேண்டுமா? நீங்கள் சீதாவை இத்தனை நாட்கள் வீட்டில் வைத்துக்கொண்டிருந்ததே பிசகு என்று சொன்னார்கள். இப்போது அவளே ஒருபடியாகத்தொலைந்து போய்விட்டாள்! அதற்காக வருத்தப் படுவானேன்? உண்மையில் சந்தோஷப் பட வேண்டும்!''

தாமா எதைக் குறிப்பிடுகிறாள் என்பதை ராகவன் தெரிந்து கொண்டு, சற்று நேரம் தலைகுனிந்து மௌனமாக இருந்தான்.

''எப்படியோ என் வாழ்க்கை பாழாகிவிட்டது. இத்தனை நாட்கள் ஆபீஸ் வேலை இருந்தது; அதுவும் போய் விட்டது. இனிமேல் வாழ்க்கையில் என்ன இருக்கிறது?''

''ஏன் இல்லை! மதராஸில் அழகான சமர்த்துக் குழந்தை இருக்கிறது. குழந்தையை அழைத்து வைத்துக் கொண்டு நீங்கள் நிம்மதியா யிருப்பதை யார் தடுப்பார்கள்!''

ராகவனுடைய கண்களில் நீர் ததும்பியது. ''குழந்தையை அழைத்து வந்தால், முதலில், 'அம்மா எங்கே?' என்று கேட்பாளே? அதற்கு என்ன சொல்வது? மேலும் குழந்தையை அழைத்து வந்தால் யார் பார்த்துக் கொள்வார்கள்!'' என்றான்.

''அதில் என்ன கஷ்டம்? குழந்தையை அழைத்து வருவதற்குள்ளே வீட்டில் இன்னொரு தாயாரைத் தயார் செய்துவிட வேண்டும்! வீட்டுக்கு எஜமானியாச்சு! குழந்தைக்குத் தாயார் ஆச்சு! வேலையைப் பற்றிக் கவலையும் வேண்டியதில்லை. இந்த வேலை போய் விட்டால் அப்பா கட்டாயம் இதை விடப் பெரிய சம்பளம் உள்ள உத்தியோகம் வாங்கித் தருவார்!'' என்றாள் தாமா.

ஃ ஃ ஃ

ராகவன் வீட்டுக்குத் திரும்பிச் சென்றபோது, 'இன்னொரு தாயார்' தயாரிப்பது பற்றித் தாமா சொன்னதின் கருத்து என்னவா யிருக்கும் என்று யோசித்துக் கொண்டே போனான். ஒருவாறு புரிந்தது. ஆனால் அவனுடைய மனம் அதைப் பற்றி நினைக்கவும் இடங் கொடுக்கவில்லை.

வீட்டை அடைந்ததும் வேலைக்காரர்கள் முகங்களில் சோகக் களையுடன் நிற்பதைப் பார்க்கச் சகியாமல் உள்ளே போனான். ஒவ்வோர் அறையாக வளைய வந்தான். அங்குமிங்கும் நடமாடினான். ஒவ்வோர் அறையும் ஒவ்வொரு மூலையும் ஒவ்வொரு சாமானும் ஒவ்வொரு படமும் சீதாவின் ஞாபகத்தைக் கொண்டு வந்தன. அந்த வீட்டுக்கு வந்த புதிதில் அன்பும் அருமையுமாக வாழ்ந்த நாட்களின் சம்பவங்கள் ஞாபகம் வந்து அவன் உள்ளத்தை உருக்கின. பிற்காலத்தில் அவர்களுக்குள் நடந்த சண்டைகளும் நினைவு வந்தன. சண்டைகளை நினைத்தபோதெல்லாம் குற்றம் தன் பேரில்தான் என்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் இனி பச்சாத்தாபப்பட்டு என்ன பிரயோசனம்? போனவள் இனி திரும்பி வரப் போகிறாளா? அல்லது அவள் இருந்த இடத்தில் இன்னொரு ஸ்திரீயைக் கொண்டு வந்து வைக்கத்தான் மனம் வருமா?

தன் வாழ்க்கையைப் புதுவிதமாகத் தொடங்கிச் சண்டை சச்சரவு இல்லாமல் பழைய நாட்களைப் போல் இல்வாழ்க்கை நடத்த வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு வீடு வந்த தினத்தில் அல்லவா இப்படி நடந்து விட்டது? தன்னுடைய நல்ல உத்தேசம் இவ்வாறு வீணாகிவிட்டதே?

யோசித்துப் பார்க்கப் பார்க்க, சீதா தன்னிடம் வெறுப்புக் கொண்டுதான் வீட்டை விட்டு ஓடிப் போயிருக்க வேண்டும் என்று ராகவனுக்கு நிச்சயமாய்த் தோன்றியது. தன்னுடைய கொடுமை பொறுக்க முடியாமலேதான் போய்விட்டாள். எங்கே போயிருப்பாள்? ஒரு வேளை யமுனையில் விழுந்து உயிரை விட்டிருப்பாளோ? அப்படியானால், சீக்கிரத்தில் தனக்குத் தகவல் தெரிந்து போய்விடும்.

சூரியா கைதியானதற்கும் சீதா காணாமற் போனதற்கும் உண்மையில் ஏதேனும் சம்பந்தம் இருக்குமா? ஒரு நாளும் இருக்க முடியாது. காக்கை உட்காரப் பனம் பழம் விழுந்த கதை தான்! தாமாவும், பாமாவும், சூரியா-சீதா இவர்களின் பேரில் கெட்ட எண்ணம் உண்டாகும்படியாக ஜாடை ஜாடையாகப் பேசியதை யெல்லாம் எண்ணிப் பார்த்து, அந்தப் பேச்சுக்களில் ஏதேனும் உண்மை இருக்க முடியுமா என்று சிந்தித்துப் பார்த்தான்.

# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை! இளமைப் பூங்காவில் பூரிப்புடன் பூத்துக் குலுங்கும் இந்த இளமங்கை, அழகு ராணியாகத் திகழ்கிறாள். அந்த புத்தெழில் என்றுமே நிலைத்திட அவள் ஜெய் அழகு சாதன சோப் உபயோகிக்கிறாள். மல்லிகை மணம் வீசும் ஜெய் சோப் மேனியை மிருதுவாக்கி, பொன்னொளி வீசச் செய்கிறது.

மல்லிகை
மணம் கமழும்
**ஜெய்**
அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7002 TM

ஒரு நாளும் இருக்க முடியாது என்ற முடிவுக்கு வந்தான்.

சில சமயம் தானும் சீதாவின் மனம் நோகும்படி சூரியாவைப் பற்றிப் பேசியதுண்டுதான். அதற்கெல்லாம் காரணம் சீதாவின் நடத்தையைப் பற்றித் தனக்கு ஏற்பட்ட சந்தேகம் அல்ல. அப்படிப்பட்ட கேவலமான சந்தேகம் லவலேசமும் தனக்கு எந்த நாளிலும் ஏற்பட்டதில்லை. சூரியாவின் பேரில் தனக்கு ஏற்பட்ட ஆத்திரத்துக்கெல்லாம் உண்மையான காரணம் என்ன? அவனைப் பற்றிப் போலீஸுக்குத் தகவல் கொடுக்கும்படியாக அவ்வளவு நீசத்தனமான காரியம் தான் செய்யப் புகுந்ததின் உண்மைக் காரணம் என்ன? தன்னுடைய இருதய அந்தரங்கத்தை நன்கு சோதனை செய்து பார்த்த ராகவன் அந்த உண்மையைக் கண்டுபிடித்தான். தாரிணிக்கும் சூரியாவுக்கும் ஏற்பட்டிருந்த சிநேகந்தான் தன்னுடைய ஆத்திரத்துக்கெல்லாம் காரணம். அதனால் ஏற்பட்ட குரோதத்தைச் சீதாவின் பேரில் காட்டி அவளுடைய வாழ்க்கையை நரகமாகச் செய்ததினாலேயே இந்த விபத்துக்குத் தான் ஆளாக நேர்ந்தது.

முதல் நாள் மாலையில் நடந்த பார்ட்டியில் தாரிணி தன்னைக் கெஞ்சி வேண்டிக் கொண்டதெல்லாம் ஞாபகம் வந்தது. சீதாவை மதராஸில் கொண்டுபோய் விட்டு பம்பாய்க்கு வரும்படியும், வந்தால் தன் பிறப்பைக் குறித்த ஓர் அந்தரங்கத்தை வெளியிடுவதாகவும் தாரிணி சொன்னாள். அந்த ரகசியம் என்னவாயிருக்கும்?

தாமாவும் பாமாவும் தாரிணியைச் சர்க்காரின் உளவுகாரி என்று சொன்னது சுத்த அபத்தம். அது ஒரு நாளும் உண்மையாயிராது. அந்தச் சகோதரிகள் வெகு பொல்லாதவர்கள். யார் பேரிலாவது குறை சொல்லுவது தான் அவர்களுடைய தொழில். அவர்களுடைய சகவாசம் உதவவே உதவாது. இந்தச் சமயத்தில் தனக்கு ஆறுதல் சொல்லக் கூடியவளும் தாரிணிதான்.

தாரிணியை எப்படியாவது சந்தித்து அவளிடம் ஆலோசனை கேட்க வேண்டும். சீதா போய்விட்டதைப் பற்றி அவளிடம் உடனே சொல்லிவிட வேண்டும்.

இன்னும் இரண்டு நாட்கள் நேற்றைக்கு பார்ட்டி கொடுத்த உத்தியோகஸ்தர் வீட்டிலே இருப்பேன் என்று சொன்னாள் அல்லவா? அங்கே அவளைக் கூப்பிட்டுப் பார்க்கலாம்.

டெலிபோனை எடுத்து ராகவன் விசாரித்தான். மேற்படி உத்தியோகஸ்தரின் வீட்டில் தாரிணி இல்லையென்று பதில் வந்தது.

அந்த நிமிஷத்தில் ராகவனுக்குத் தன்னுடைய வருங்கால வாழ்க்கை யெல்லாம் சூனியமாகத் தோன்றியது. (தொடரும்)



## வேலைமுறையில் மூன்று நிலைகள்

'ஒவ்வொரு பணியும் மூன்று நிலைகளைக் கடந்தே செல்ல வேண்டும். முதலில் அதனை இகழ்ச்சியாக நினைப்பார்கள். இரண்டாவதாக எதிர்ப்பு வரும். மூன்றாவதாக அதனை ஒப்புக் கொள்வார்கள். தான் வாழுகிற காலத்துக்குப் பின்னால் வரப் போவதைச் சிந்தித்துப் பார்க்கிற மனிதனைச் சமுதாயம் நிச்சயமாகத் தப்பாகவே புரிந்து கொள்ளும். ஆகவே, எதிர்ப்புக் கொடுமைகளும் வரட்டும்; வரவேற்கிறேன். நான் மட்டும் தூய்மையுடனும் உறுதி குலையாமலும் இருக்க வேண்டும்; இறைவனிடத்தில் அபாரமான நம்பிக்கையுடன் இருக்க வேண்டும். இந்தக் கஷ்டங்களெல்லாம் நிச்சயமாக மறைந்து போகும்.'

சுவாமி விவேகானந்தரின் மேற்கண்ட பொன்மொழிகளுக்கு நாம் இன்று நிதர்சனமாக நேரே கண்டு அனுபவித்து வரும் மூதறிஞர் ராஜாஜியின் வாழ்க்கையும் பணியும் உண்மை இலக்கியமாகத் திகழ்கின்றன அல்லவா?

-- வி.ச. வாசுதேவன்







# சுதந்திராச் சிற்பிகள்

1. பிலூ மோடி
2. மசானி
3. ஆர். என். சிங் தேவ்
4. தாண்டேகர்
5. மது மேத்தா
6. ஜி. கே. சுந்தரம்







# மாதம் ஒன்று, இரண்டு, மூன்று
# மெல்ல கவிழ்ந்து படுக்கும் நன்று



மூன்றுவது மாதத்திலிருந்து உங்கள் குழந்தைக்குப் பால் மட்டும் போதாது. சீரான உடல் வளர்ச்சிக்கு உங்கள் குழந்தைக்குத் தேவை பாரெக்ஸ்....அதன் முதலாவது திடஉணவு. குழந்தையின் மென்மையான ஜீரணத்திற்கு ஏற்ற சரியான புரதச் சத்து கொண்டது பாரெக்ஸ்.

குழந்தைக்கு எத்தனை சீக்கிரம் திட உணவு கொடுக்க ஆரம்பிக்கிறீர்களோ அத்தனை நல்லது என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். குழந்தையின் சீரான வளர்ச்சிக்கு வேண்டிய சரியான புரதச் சத்துடன், கார்போ ஹைட்ரேட்டுகள், கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் மற்றும் தாது உப்புகள் யாவும் அடங்கியது பாரெக்ஸ். பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற 25 பைசா தபால் தலையை இணைத்து, டிபார்ட்மெண்ட் K-I-P த.பெ. 16558, பம்பாய் 18 டபிள்யூ பி. என்னும் முகவரிக்கு எழுதுக. (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).




CMCF-2006-202-Tam

**சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு.**

# பாரெக்ஸ்® - க்ளாக்ஸோ தயாரிப்பு

# ஓர் எளிய நேர்மையான பேரரசர்

## மைசூர் மகாராஜா ஸ்ரீ ஜயசாமராஜ உடையார்

பல ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்களைச் சந்திக்கும் பாக்கியமும் கௌரவமும் எனக்குக் கிடைத்தன. அக்காலம் முதல் அவரது அன்பையும் நல்லெண்ணத்தையும் குறையாது நிறையப் பெறும் பேரதிர்ஷ்டம் எனக்கு இருந்து வருகிறது. பெங்களூர் மத்தியகல்லூரியில் பயின்றதாலும், கன்னட மொழி நன்கு அறிந்துள்ளதாலும் அவர் மைசூர் மக்களின் அன்புக்குப் பாத்திரமாகியுள்ளார். அவரது பிறந்த தின விழா டிஸம்பர் மாதம் 8ந் தேதி கொண்டாடப்படவிருக்கிறது என்பதை அறிந்து மிக அதிகமான புத்தி நிட்சண்யம் உள்ள இப்பெரியார், இந்தியாவும் உலகமும் இவரது புத்திமதியால் பயனடைய இன்னும் பல்லாண்டு காலம் வாழ வேண்டுமென்று இறைவனை வேண்டுகிறேன்.

இந்தியாவின் மூத்து முதிர்ந்த இவ்வரசியல் பேரறிஞரின் குண நலமும் தோற்றமும் மனிதர்களின் இதயங்களில் ஆச்சரியத்தையும் மரியாதையுடன் கூடிய வியப்பையும் உண்டாக்கியுள்ளன. இவரது இணையற்ற தேசபக்தி, எதற்கும் அஞ்சாத தைரியம், அரசியல் அறிவு, கூரிய பகுத்தறிவு, தெளிவான நோக்கம் இவை நம் நாட்டினரிடையே எடுத்துக்காட்டிப் பேசக்கூடியவைகளாகி விட்டன. அவரது மனமும் புத்திகூர்மையும் எவரும் அறிந்தவை. அவரது அரசியல் தீர்க்கதரிசனம் யாவற்றிலும் மேன்மையானது. இவரது அரசியல் அறிவு மகாத்மா காந்தியையே வியக்கச் செய்து, தமக்கு ஆறு மாதங்களுக்கு முன்னாலேயே விஷயங்களை அறிந்துகொள்ளும் ஆற்றல் படைத்தவர் எனக் கூறச் செய்தது. பாகிஸ்தானின் தோற்றம் தவிர்க்க முடியாதது, சக்திவாய்ந்த ஒரு சிறுபான்மைக் கட்சியினருடன் உடன்படிக்கை செய்து கொள்ளத்தான் வேண்டும் என ராஜாஜி முன்னாலேயே தெரிந்து கொண்டார் என்பது யாவரும் அறிந்ததே. வெகு காலத்துக்கு முன்னாலேயே அணு ஆயுதச் சோதனைகளின் பயங்கர விளைவுகளைப் பற்றி அவர் சுட்டிக் காட்டினார். சமீபத்தில் உலகத்தின் அரசியல் தலைவர்கள் கூடி அந்தச் சோதனைகளைத் தடுப்பதற்கான ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திட்டனர். தனிப்பட்ட மனிதருக்கு அதிகமான அதிகார பலம் கொடுப்பதை அவர் எதிர்த்துப் போராடினார். அவரது வாதம் சரியானது என்பதைக் ''காமராஜர் திட்டம்'' மெய்ப்பித்தது.

சொந்த நலனுக்குச் சலுகை தேடாததும் கர்வமற்றிருப்பதும் ராஜாஜியுடன் கூடப் பிறந்த குணங்கள். அரசாங்கத்தில் மிகப் பெரிய பதவியை வகித்த போதிலும் சென்னை மாகாணத்தின் அன்றைய நிலையைச் சீர்திருத்த வேண்டும் என்பதற்காக அழைக்கப்பட்டபோது சென்னையின் தலைமைப் பதவியை ஏற்றுக் கொள்ள அவர் தயங்கவில்லை. ஒத்துழையாமை இயக்கத்தில் சேருமாறு காந்திஜியால் அழைக்கப்பட்டபோது தமது தொழிலையும், வசதிகளையும் துறந்து தம் நண்பர்களுடன் போராட்டத்தில் குதித்தார். ஏதாவது ஒரு காரியம் நேர்மையானது என அவர் தீர்மானித்து விட்டால் அவரை யாரும் மாற்றவே முடியாது. இந்தத் தைரியமான குணம், தாமே பல ஆண்டுகள் பாடுபட்டு வளர்த்த காங்கிரஸ் ஸ்தாபனத்தையே அவர் எதிர்க்குமாறு செய்தது. முன்னொரு காலத்தில் சட்டசபைப் பிரவேசம் எந்த விதமான நற்பயனையும் அளிக்காது என இவர் எண்ணி, அதன் காரணமாகத் தமது மேன்மையான தோழர்களிடமிருந்து விலகி, 'மாறுதல் வேண்டாத கோஷ்டி'யின் தலைவராக விளங்கித் தம் கொள்கையை யாவரும் ஏற்க வேண்டும் எனப் பிரசாரம் செய்தார்.

ராஜாஜியின் கடமை உணர்ச்சி குறிப்பிடத்தக்கதொன்றாகும். சர்தார் பட்டேலின் மறைவுக்குப் பின் உள்நாட்டிலாகா மந்திரிப் பதவியை ஏற்குமாறு பண்டித ஜவாஹர்லால் நேரு இவரை அழைக்க, இவரது கடமை

**''மனிதகுலத்தின் முன்னேற்றம் நீதி, நேர்மை என்ற நல்ல அஸ்திவாரத்தின் மீதுதான் சாத்தியமானது என்பது ராஜாஜியின் திடமான கருத்து. ராமனும் அரிச்சந்திரனும் பிறந்த நாட்டிலே காணும் பொய்மையை அவரால் பொறுக்க முடியவில்லை...''**



உணர்ச்சி தயக்கமில்லாது அப் பதவியை ஏற்கச் செய்தது. ராஜப் பிரதிநிதியாக அரசாங்கத் தலைவராக விளங்கிய இவர், சோதனை நிறைந்த நேரத்தில் உள்நாட்டிலாகா பதவியை ஏற்று, அரசாங்கத்துக்கு உதவுவது தம் கடமை என எண்ணி, அப்பதவியை ஏற்க இணங்கினார். சில சூழ்நிலைகளில் கடமை



உணர்ச்சியால் உந்தப்பட்டு நண்பர்களையும் எதிர்த்தார். பொது வாழ்விலுள்ள விகாரமான அருவருக்கத்தக்க பிழைகளைக் கண்டித்தும் லஞ்ச ஊழலுக்கு எதிராகவும் தமது சக்திவாய்ந்த குரலை எழுப்பினார். அவரது கடமை உணர்ச்சி நாட்டின் நன்மையைப் பற்றியே அவர் எண்ணவும் செயலாற்றவும் தூண்டியது. காங்கிரஸிலிருந்து பிரிந்து சுதந்திரக் கட்சியைத் தோற்றுவிக்கச் செய்தது இதே உணர்ச்சிதான்.

ராஜாஜியின் நேர்மை உணர்ச்சி அவரது கடமை உணர்ச்சிக்குச் சமமானது. உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்களில் நேர்மையையும் கடமை உணர்ச்சியையும் கைக்கொண்டால் மக்களுடையவும், சமுதாயத்தினுடையவும் நல்லெண்ணத்தையும், ஒத்துழைப்பையும் பெற முடியும் எனத் தமது நண்பர்களுக்கும் சகாக்களுக்கும் அவர் தீவிரமாக அறிவுறுத்துவது வழக்கம். மனித குலத்தின் முன்னேற்றம், நீதி, நேர்மை என்ற நல்ல அஸ்திவாரத்தின் மீதுதான் சாத்தியமானது என்பது அவரது திடமான கருத்து. நியாயமான காரியங்களை, நல்ல காரியங்களைச் செய்யலாமா எனப் புனராலோசனை செய்தாலே அவரது நியாயமான கோபம் கிளம்பி விடுகிறது. இராமனும் அரிச்சந்திரனும் பிறந்த நாட்டிலே, காணும் பொய்மை அவரால் பொறுக்க முடியவில்லை. தெய்விக, தர்ம மயமான செயல்களைப் பேராசையாலும், நேர்மையின்மையாலும் தூண்டப்பட்ட மனிதர்கள் அழிக்க முற்பட்டால் அவர் திடுக்கிடுகிறார்.

உயர்ந்த எண்ணங்களுடன் எளிய வாழ்க்கை நடத்துவது என்ற கொள்கையில் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் நம்பிக்கையுள்ளவர். அவரது உடைகள் வெண்மையாகவும் தூய்மையாகவும் உள்ளவை. அவரது பழக்கங்கள் சீரானவையாகவும், சரியானவையாகவும் உள்ளன. அவரது எண்ணங்கள் சுத்தமும் பெருமையும் உள்ளவை. தங்கள் உடைகளைத் தாங்களே சலவை செய்துகொள்பவர்கள் மிகச் சிலரே. எளிய உணவு கொண்டு திருப்தி அடைபவர்களும் சிலரே. இவருடைய ஆரோக்கியம் நிறைந்த பழக்கங்கள் இவரது நண்பர்களை இவர்மீது அன்பு கொள்ளச் செய்கின்றன. இவரது நகைச்சுவை உணர்ச்சி ஒப்பில்லாதது.

காந்தி சகாப்தத்தில் காங்கிரஸின் முன்னணித் தலைவராக விளங்கிய ராஜாஜி, சுதந்திரம் கிட்டிய பின் மிகப் பெரிய பதவிகளை வகித்தார். சுதந்திர இந்தியாவின் கவர்னர் ஜெனரலாகவும், சென்னை மாகாண முதன்

# ஞானதீபம் வாழ்



இந்தியத்தாய் பெற்றெடுத்த முதியமைந்தர்
இந்நூற்றாண்டின் மேதை ஞானதீபம்

வந்தித்து நாமேத்த நம்முன் வாழ்ந்து
வாய்மையதே தன்னுடைய நெறியாமென்றே

சிந்தித்துச் சிந்தித்தே அறங்கள் கூறிச்
செம்மைதரும் அறிவாழி! வையம் போற்ற

முந்திய நற்றலைமுறைக்கும் நமக்கும் வாழ்ந்து
முழுமைகண்ட தத்துவத்தின் தனித்த சின்னம்

குச்சியென மெலிந்திருக்கும் உடலினோடு
கோல்கொண்ட கரத்துடனே உலவி என்றும்

அச்சமறியா உயர்ந்த உள்ளங் கொண்டே
அரசியலின் விடிவெள்ளி போன்று நிற்கும்

மெச்சுதவ ராஜாஜி மேன்மை தன்னை
மேதினியே வியந்தேத்தக் கண்டோம் — அந்த

இச்சையிலா ராஜாஜி இமயம் போன்றே
இன்னும்பல் நூற்றாண்டு வாழிவாழி!

இளங்கம்பன



அறிவுச் சுடரும் அஹிம்சாமூர்த்தியும்

மந்திரியாகவும் மேற்கு வங்காள கவர்னராகவும் இந்தியாவின் உள்நாட்டு மந்திரியாகவும் விளங்கினார். எல்லாப் பதவிகளிலும் தமது நிர்வாகத் திறமையையும் செயலாற்றும் பெருமையையும் வெளிப்படுத்தினார். அவரது அரசியல் நோக்கும் அறிவுத் திறமையும் மந்திரி சபையிலுள்ள மற்ற மந்திரிகளுக்கும் நாட்டுக்கும் மிக உதவின. மாகாண ரீதியில் மதுவிலக்குக் கொள்கையை அவர் முதன் முதலாக வெற்றி பெறச் செய்தார். உணவுக் கட்டுப்பாட்டை நீக்கியது உள்பட நிர்வாகத்தில் பல பிரமிக்கத் தக்க காரியங்களைச் செய்தார். சென்னை மாகாண முதன் மந்திரியாயிருந்தபோது நிர்வாகத்தை மிக மேன்மையான முறையில் நடத்தி ஏனைய மாகாண முதல் மந்திரிகள் பின்பற்றத் தக்க ஓர் உதாரண புருஷராக விளங்கினார்.

உலக நிகழ்ச்சிகள் யாவற்றைப் பற்றியும் தமது கருத்துக்களைக் கூறுவதுடன், வாழ்க்கையில் பல வேலைகளில் ஈடுபட்டுள்ளவர்களுக்குத் தமது ஆலோசனைகளையும் கூறுவார். ஜலவாயு குண்டு, பி. ஸி. ஜி. மருந்து, வியட்நாம் போர், உலக சபையிலிருந்து தைவான் நீக்கம், கிழக்கு வங்காளப் பிரச்னை— இந்திய — ரஷ்ய ஒப்பந்தம் இம்மாதிரியான விஷயங்களை அவர் கவனத்துடனும் ஆழ்ந்தும் பரிசிலனை செய்கிறார். அவரது ஆலோசனைகள், புத்திமதிகளால் நாட்டின் பெருந்தலைவர்கள் பெரும் பயன் அடைகின்றனர்.

ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் தேர்ச்சியுள்ள நிர்வாகி, திறமையான அரசியல்வாதி என்ற பெயரை நிலையாகப் பெற்றுள்ள போதிலும் அவர் ஒரு மிகப்- பெரிய ராஜதந்திரி எனக் கூறுவதுதான் பொருத்தமாகும். சிறிய லாபங்களையும், குறுகிய அரசியல் கீர்த்தியையும் அவர் மதிப்பதில்லை. சிறிய நன்மைகளைப் பெறுவதைக் காட்டிலும், மனித சமுதாயத்தின் நன்மை பற்றியே அவர் அதிகமாகச் சிந்திக்கிறார். இந்தக் குணமானது அவரது அரசியல், பொருளாதார, சமூக முடிவுகள் பலவற்றை மீண்டும் பரிசிலனை செய்து மாற்றிக் கொள்ளக் கூடிய நிலைமையை ஏற்படுத்தியதுண்டு. அணுகுண்டு சோதனைகள் காரணமாகச் சமாதானத்துக்கும் மனித குலத்துக்கும் ஏற்படக் கூடிய மிகப் பெரிய ஆபத்துக்களை உணர்ந்த அவர், அணுகுண்டு சோதனைகளை உடனடியாக நிறுத்த வேண்டியதன் அவசியத்தை விளக்கி வற்புறுத்துவதற்காக மேல்நாடுகளுக்குச் செல்லவும் இணங்கினார்.

இந்திய தேசம், உலகம் ஆகியவற்றின் நன்மைக்காக ராஜாஜி செய்துள்ள காரியங்கள் மிக மேன்மையானவை. சுதந்திரக் கட்சியை நிறுவி, அதற்கான தெளிவான கொள்கையையும் திட்டத்தையும் தீட்டி அளித்து நாட்டு மக்களுக்கு உணர்ச்சி ஊட்டி நல்வழி காட்டினார். அரசாங்கமும் தலைவர்களும் தவறு இழைத்தால் அவர்களது குற்றத்தை நேராகக் கண்டித்துப் பேசுவதற்கான தைரியத்தை மக்களுக்கு உண்டாக்கினார். பார்லிமெண்டில் மிகத் தேவையான எதிர்க் கட்சி ஒன்றை நிறுவினார். யாவற்றுக்கும் மேலாக, தாம் தம் கட்சியின் ஆலோசகராக இருப்பதோடு திருப்தியடைந்து, அறிவில் சிறந்த மற்றவர்களை அரசியல் காரியங்களில் தமது கட்சியில் பங்கு பெறச் செய்





அண்மையில் தாமிரபத்திரம் வழங்கப்பட்டபோது. இந்தியாவின் மிக உயர்ந்த கௌரவமான பாரத ரத்ன பதக்கத்தை அணிந்திருப்பதே முறை எனக் கருதி அவ்வமயம் அதனை நெஞ்சில் தரித்தார் ராஜாஜி.

தார். இத்தனைக்கு மிடையில் அவர் மனித குலத்தின் முன்னேற்றத்தைச் சதா கண்காணித்து வருகிறார். அம் முன்னேற்றம் சகலருடைய ஒத்துழைப்பினாலேதான் கிட்டும் என்பதை உணர்ந்திருக்கிறார். மனித குலத்தின் முன்னேற்றம், சமாதானம் ஆகியவற்றுக்குத் தேவையான பரஸ்பர ஒத்துழைப்பு, நல்லெண்ணம் ஆகியவற்றைப் பற்றி அவரது பேனா சுறுசுறுப்பாக எழுதிக் கொண்டேயிருக்கிறது.

ராஜாஜியின் அரசியல் சித்தாந்தம் மதம், தர்மம் ஆகியவற்றின் அடிப்படையில் நிற்கின்றது. மனிதர்கள் தத்தம் மதங்களின் மீது பூரண நம்பிக்கை வைத்தால்தான் முன்னேற்றமடைய முடியும் என்ற திடமான நம்பிக்கையுள்ளவர். தெய்வ நம்பிக்கையைப் போலவே அரசியல் பிரச்னைகளில் நேர்மை உணர்ச்சி அவசியமானது என்பது அவர் துணிபு. ''எண்ணெய் நிரம்ப ஊற்றப் பெற்று ஒளி மிக்கதாக எரியும் தீபத்தைப் போல் நமது தருமமானது புத்துயிர் ஊட்டப்பெற்றுப் பலப்படுத்தப்பட்டாலன்றி நாம் அமைதியுடன் வாழ இயலாது'' என்று அவர் உணர்ந்துள்ளார். ஜனநாயக ஸ்தாபனங்களிலும் ஜனநாயகத்திலும் பூரணநம்பிக்கையுள்ள அவர் தனி மனிதனின் உரிமைகளுக் காகவும் சலுகைகளுக் காகவும் போராடுவதில் தயக்கம் காட்டுவதே கிடையாது.

ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரை அவரது நண்பர்களிட மிருந்து பிரத்தியேகமாகச் சிறப்பித்துக் காட்டுவது அவரது எழுத்தார்வமே. கதை கூறும் அவரது சக்தி மிகச் சிறந்ததொன்று. அவர் பிறவிக் கவிஞர். அவரது ஆங்கிலம் குற்றமற்றது. அவரது மொழி நடை பரிசுத்தமும் எளிமையும் நிறைந்தது. இந்தியாவின் இரண்டு இதிகாசங்களான இராமாயண, மகா பாரதக் கதைகளைமீண்டும்அறிமுகப்படுத்திய சிறப்பு அவரைச் சேரும். இந்தியர் களுக்காகவும் உலக மக்களின் உபயோகத் துக்காகவும் உபநிஷத்துக்கள், கீதை முதலானவற்றின் கருத்துக்களை அவர் எழுதி வெளியிட்டுள்ளார்.

ராஜாஜியின் இலக்கிய சக்தி, அரசியல் முதிர்ச்சி, தெய்விகமான நடத்தை, நேர்மையின் மீதுள்ள பற்றுதல் ஆகியவை மக்களின் இதயங்களில் அவருக்கு ஒரு தனி இடத்தை ஏற்படுத்தியுள்ளன. இன்றும் அவர் தமது வாழ்வையும் சக்தியையும் மனித குலத்தின் சேவைக்காக அர்ப்பணிக்கிறார். இந்த இந்திய ரத்தினம் (பாரத ரத்தினம்) பயத்தையும், வெறுப்பையும் விட்டொழித்து, உண்மையான மனிதத் தன்மையை அறிந்துகொள்ளுமாறு மக்களைக் கேட்டுக் கொள்ளுகிறார். உலக மகாசபையின் பொதுக் கூட்டத்தில் பாடுவதற்கு என அவரால் இயற்றப்பட்ட பாடலின் ஆரம்ப வரிகள் மனித குலத்துக்கு அவர் அளிக்க முயலும் உயர்வான செய்தியை எடுத்தியம்புகிறது. இது அவரது சிறப்பான கொள்கைகளுக்கு ஒரு நிரந்தர சாசனமாகும்:

''இறைவன் நமது பாபங்களை மன்னிப்பாராக. உலகின் எல்லா நாடுகளையும், இணை சேர்க்கும் இக் கூரையின் கீழ் திரளச் செய்வாராக. வெறுப்பையும் பயத்தையும் ஒதுக்கித் தள்ளி ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ள அருள் புரிவாராக.''

தமிழாக்கம் — **வி. தியாகராஜன்**

# ஒவ்வொரு முறையும் 80 பைசா மிச்சப்படுத் துங்கள், மீண்டும் பயன்படும் பிஜ் பேக்கில் 5 முறை நிரப்பி.

## ஆகையால், '5-ரீ:பில்' கொண்ட பிஜ் போலிபேக் வாங்கினுல், உங்களுக்கு மிச்சம் ரூ. 4!

இந்த சேமிப்பு தவிர, உங்கள் சமையலறைப் பாத்திரங்கள், கண்ணாடிச் சாமான்கள், தரைகள் மற்றும் பீங்கான் சாமான்கள் எப்போதையும் விட அதிக பளிச்சிடும்! விரைவில் நுரை தரும், நொடியில் சுத்தம் செய்யும், உன்னத டிடர்ஜெண்ட் சக்தி படைத்த காரணத்தால், கண்ணைப் பறிக்கும் பளபளப்பைத் தருகிறது, பிஜ்.

கணக்கு சுவையானது:
5 பிஜ் பேக்குகள் அல்லது மற்ற க்ளீனிங் பவுடர் பேக்குகளின் விலை சுமார் ரூ. 8.75
'5 ரீ:பில்' கொண்ட ஒரு பிஜ் போலிபேக்கின் விலை சுமார் ரூ. 4.75
மிச்சம் ரூ. 4




பிஜ்
கோத்ரெஜ்
தயாரிப்பு.

CMGS-42-182 Tam

குளிர்காலத்திலும் சரி,
கோடைகாலத்திலும் சரி—
மார்கோசோப்
சுத்தம் செய்வதோடு மட்டும்
நிற்பதில்லை—
சருமத்தை பாதுகாக்கிறது.

**ஏனெனில் மார்கோவில்
மட்டுமே வேப்பெண்ணெய்
சேர்ந்துள்ளது.**




**மார்கோ சோப்**

ஒரு கல்கத்தா கெமிகலின் தயாரிப்பு

CCM-4183-A (Rev)
















படங்கள்: ராவுஜி

உரையாடல்: கற்பனை

# ஜாங்கோ ஜக்கு

10

கதை: குட்டி கிருஷ்ணன்
சித்திரம்: ராஜ்

அடுத்த காட்சி படமாக்கப் பட எல்லாம் தயாராகி வந்தன. பிச்சுமணிக்குத் தன் மீது காழ்ப்பு; வாய்ப்புக் கிடைக்கும் போது அப்பளத்தை நொறுக்குவது போல் தன்னைப் பொடியாக்கி விடுவான் என நன்கு உணர்ந்திருந்தான் ஜக்கு. ஆகவே ....










சற்று நேரத்துக்குப் பின் ஷூட்டிங் ஆரம்பமாயிற்று. கதாநாயகி குளிக்கும் போது தொந்தரவு தருகிறான் வில்லன்...




கதாநாயகியின் அலறலைக் கேட்டு விரைந்து வருகிறான் ஜாங்கோ. காமிராக்கள் இயங்கின.







தன் முதுகுப்புறத்தைக் காமிராவுக்குக் காட்டி மெல்லக் கறுப்புக் கண்ணாடியை ஆங்கிலோ கழற்ற...
ஐயோ! பயங்கரத் தொத்து நோய் இது! அக்கு என் கிட்டே வராதே! இதோ நான் ஓடிப் போறேன்!


அடுத்த டேக்: வில்லன் ஓடியதும் கதாநாயகியின் கரம் பிடித்துக் கரை சேர்க்கிறான் ஆங்கிலோ.
ஆஹா! பிரமாதமா போச்சு, இந்த சீன்! நீ கறுப்புக் கண்ணாடியைக் கழற்றி அலட்சியமாய் ஒரு பார்வை பார்த்ததுமே வில்லன் பயந்து ஓடுறான்!
வசனத்தை மட்டும் இலேசா மாற்றி ஸவுண்ட் டிராக் தயாரிச்சுக்கலாம்!


அது சரி ஸார்! ஆங்கிலோ ரொம்பப் பழங்காலப் பேர்வழியாச்சே? கூலிங்கிளாஸ் அணிவானா?
கவலைப் படாதே! பியூஷன் பிக்சர்னு சொல்லிச் சமாளிக்கலாம்!


அன்று படப் பிடிப்பு முடிந்து மாலையில் ஓய்வாக இருந்தபோது ஜக்குவின் சிந்தனையை முழுமையாக ஆக்கிரமித்த உருவம்....
என் அன்புள்ள... மை டார்லிங்... கண்மணி... நெஞ்சில் நிறைந்தவளே... எப்படி ஆரம்பிப்பது காதல் கடிதத்தை?


ஒருவாறு கடிதத்தை எழுதி முடித்த தருவாயில் யாரோ நெருங்கி வருவது போல் சத்தம் கேட்கவே....
காதல் கடிதாசை அப்பண்ணா பார்த்து விட்டால் ஆபத்தாகி விடலாம். இங்கே ஒளிச்சு வைக்கிறேன்!

தொடரும்




ஸிஸிஎம் புதிய மிர்ராபோ ஃபுல் வாயில் புடவைகள் 2/120x2/120 உயர்தர எகிப்திய பருத்தியால் உருவாக்கப்பட்டவை. 'ஆன்டிகிரஸ்' செய்யப்பட்டதால் என்றும் கசங்காது. மற்றும் பொருத்தமான ஃபுல் வாயில் ரவிக்கைத் துணிகள்.

இதர தயாரிப்புகள்: ஸ்டேலாங்கர், ஸ்ட்ரேஞ்சர் ஷர்ட்டிங்குகள் • எலகன்ஸா சூட்டிங் • லவ்லின் ஷர்ட்டிங் • சில்வர்லைன், சில்வர் கிங் வேஷ்டிகள் • மல் • காடா.

# உள்ளக் கிளர்ச்சி அலைகள்... வண்ணக் கவர்ச்சி சேலைகள்!

## நியூ மிர்ராபோ

ஃபுல் வாயில் புடவைகள் 2/120x2/120

ADWAVE CCM 29 TMA




உங்கள் குடும்ப நண்பன்...CCM

**தி கோயம்பத்தூர் காட்டன் மில்ஸ் லிமிடெட்**

மார்க்கெட் செய்பவர்கள்: வெங்கடேஷ் வஸ்திராலயா

# ராஜாஜியின் ஜெயில் டைரி

## 1922 ஜனவரி, 11உ.

இன்று புதன் கிழமை. மகமது ஹுஸேனை, குணமாகி விட்டதென்று ஆஸ்பத்திரியிலிருந்து அவருடைய அறைக்கு அனுப்பி விட்டார்கள். அவர் போகும் பொழுது பகவத்கீதையையும் எடுத்துக் கொண்டு போயிருக்கிறார். பாரிஸ்டர் லட்சுமி நாராயணன் என்பவர் நேற்று ஆஸ்பத்திரிக்கு வந்தார். ஒத்துழையாமைக்காரர்கள்தான் ஆஸ்பத்திரி முழுவதிலும் வந்து நிறைந்து விடுவார்கள் போல் தோன்றுகிறது. சிறையில் காணப்படும் நிர்வாக ஊழல்களைக் கண்டுபிடிப்பதிலும் சிறைச் சூழ்நிலையைச் சீர்திருத்தம் செய்வதிலும் தாமும் தம்முடைய நண்பர்களும் செய்த சேவைகளைக் குறித்து திருலட்சுமி நாராயணன் விரிவாகக் கூறினார். ''வெகு நாட்களாகக் கைதிகளை மிருகத்தனமாக அடித்து வந்த வழக்கம் நாங்கள் வந்த பிறகுதான் நின்றுபோயிற்று'' என்று கூறினார்.

இன்னொரு சின்ன டாக்டர் வந்திருக்கிறார். இவர் ரொம்பவும் அடக்கம் நிறைந்தவராகத் தோன்றுகிறார்.

'பொற் பொக்கிஷ சாலை வரிசை' என்று ஆங்கில நூல் வெளியீட்டு வரிசை ஒன்றிருக்கிறது. அதில் ''சாக்ரட்டீஸின் விசாரணையும் மரணமும்'' என்று ஒரு நூலை வெளியிட்டிருக்கிறார்கள். அதைப் படித்தேன்.

கைதிகளைப் பேட்டி கண்டு பேசும் விஷயமாகச் சிறைச்சாலை விதிகள் யாவை என்று கேட்டுக் கிருஷ்ணசாமி சிறைத் தலைமை அதிகாரிக்கு ஒரு தபால் கார்டு எழுதியிருக்கிறார். அவர் அதை ஜனவரி 3ந் தேதி எழுதியிருக்கிறார்; அதாவது என்னுடைய கடிதம் போய்ச் சேருவதற்குச் சிறிது முன்னால்.



## 1922 ஜனவரி, 12உ.

வியாழக்கிழமை. வேல்ஸ் இளவரசர் நாளை சென்னைக்கு வருகிறார். அதனால் நாளைக்கு எல்லோரும் உண்ணாவிரதம் இருக்க வேண்டும் என்று லட்சுமிநாராயணன் கூறுகிறார். அதைப் பற்றி அவரிடம் விவாதித்தேன். அவர் இறுதியில் அந்த எண்ணத்தைவிட்டுவிட ஒப்புக் கொண்டார். அவருக்கு நான் கூறுவதில் நம்பிக்கை உண்டாகவில்லை. நான் கூறுகின்றேன் என்பதற்காகவே ஒப்புக் கொண்டிருக்கிறார். வேல்ஸ் இளவரசர் விஜயம் செய்யும்பொழுது சர்க்கார் அநேகவிதமான ஆர்ப்பாட்டங்களுடன் அதைக் கொண்டாடுவார்கள். அதைக் கொண்டு ஜனங்கள் திருப்தியாகவும் சந்தோஷமாகவும் வாழ்வதாகச் சர்க்கார் உலகத்துக்குக் காட்ட முயல்வார்கள். அதற்கு இடந்தரலாகாதென்ற நோக்கத்துடன்தான் ஜனங்கள் இளவரசருக்கு அளிக்கும் வரவேற்பில் கலந்து கொள்ளாமல் ஹர்த்தால் நடத்துகிறார்கள்.

''நாம் சிறை வந்ததன் மூலம் நம்முடைய மனநிலையைக் காட்டுவதற்கு நாம் செய்யக் கூடியதையெல்லாம் செய்து விட்டோம். ஏதோ துக்கம் கொண்டாடுவது போல் சிறையில் உள்ளவர்கள் உண்ணாவிரதத்தை அனுஷ்டித்தால் வேல்ஸ் இளவரசரிடம் நாம் பகைமை பாராட்டுகிறோம் என்றே அர்த்தமாகும். ஆனால் நமக்கோ அவரிடம் யாதொரு பகைமையும் கிடையாது. ஜனங்கள் ஹர்த்தால் நடத்துகிறார்கள். நாம் சிறையில் இருப்பதால் அதில் கலந்து கொள்ள முடியாதவர்களாயிருக்கிறோம். அதற்காக நாம் வேறு விதத்தில் நம்முடைய வெறுப்பைக் காட்டிக்கொள்ள வேண்டு



''என்னுடைய ஆசிகள் என்றும் வீண் போவதில்லை !''

இரவுபகலாகப் பூட்டிக்கிடக்க வேண்டும் என்ற உத்தரவு இங்கும் அமுலுக்கு வந்துவிட்டது என்று தெரிகிறது. தனிச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது போல் இரவு பகலாகத் தனி அறையில் அடைத்துப் பூட்டி வைப்பது அடாத செயலாகும். கடுங்காவல் தண்டனை பெற்றவர்கள் எங்களைவிட அதிர்ஷ்டசாலிகள். அவர்கள் திறந்த வெளியில் வேலை செய்யவேண்டியிருப்பதால் எங்களைப்போல் பூட்டி வைக்கப்படவில்லை. துன்பத்தைச் சகிப்பதால் பயன் காண்போம் என்ற நம்பிக்கை உடையவர்கள் நாம். அதனால் இத்தகைய கொடிய தண்டனை முறைகளை அனுபவிக்க நேர்ந்திருப்பதை நம்முடைய அதிர்ஷ்டமாகவே கருத வேண்டும்.

ஆயினும் அரசியல் கைதிகளின் நிலைமையைப் பார்ப்போம். அவர்களில் ஒருவரைப் பத்து அடி சதுரமான ஓர் அறையில் கடவுள் அருளிய காற்றும், வெளிச்சமும் இல்லாதபடி அடைத்துப் போட்டு வைப்பது எத்தனை அக்கிரமம் பாருங்கள். குற்றவாளிகளை ஜனங்களிடமிருந்து பிரித்துச் சிறையிலிடுவது கூடத் தவறு என்பது என் கருத்து. அதாவது போகட்டும். ஆரோக்கிய வாழ்வுக்கு அத்தியாவசியமான காற்று முதலிய இன்றியமையாத பொருள்களை அவர்களுக்குக் கிடைக்க வொட்டாமல் செய்யும் கொள்கையை என்னவென்று கூறுவது? அறிவுடையதோ அறிவில்லாததோ அந்தக் கொள்கைக்கு அணுவளவுகூட நியாயம் கிடையாது. இதோ, எங்கள் அறைக்கு முன்னால் ஒரு பெரிய திறந்தவெளி இருக்கிறது. அதை வேறு எதற்கும் உபயோகிப்பதில்லை. அப்படியிருந்தும் பழிக்குப் பழி வாங்குவதுபோல் எங்களை அதனருகில் போக வொட்டாதபடி அதைச் சுற்றி வேலி போட்டுக் காவல்காரர்களை வைத்துக் காவல் காத்து வருகிறார்கள். எவ்வளவு கொடிய குற்றங்களைச் செய்தவர்களாக இருப்பினும், இப்படிச் செய்வது மிருகத்தனத்திலும் மிருகத்தனம் என்று எள்ளளவும் தயக்கமின்றிக் கூறுவேன். அரசியல் வேலை செய்து தாங்களாகச் சிறையை நாடி வந்தவர்களை இப்படி நடத்துகிறார்களே என்று நான் விசேஷமாக எடுத்துக் கூற மாட்டேன். அப்படிக் கூறினால் அரசியல் கைதிகளுக்கு நல்ல ஜலம் கொடுங்கள், சாதாரணக் கைதிகளுக்கு அழுக்கு ஜலம் கொடுங்கள் என்று கூறுவது போலாகும்.

மென்ற அவசியமே கிடையாது'' என்று லட்சுமி நாராயணனிடம் கூறினேன். வேல்ஸ் இளவரசர் சென்னைக்கு விஜயம் செய்வதை முன்னிட்டு உண்ணாவிரதம் இருக்க வேண்டும் என்று கூறிய லட்சுமி நாராயணன் பிறகு அந்த எண்ணத்தை விட்டு விட்டார்.

நேற்று இரவு ஆஸ்துமா நோய் அதிகத் தொல்லை தந்தது. ஆஸ்பத்திரிக்கு வந்த பிறகு அது இதுவரை தலை காட்டவில்லை.

டாக்டர் ராஜனும் பிறரும் என்னைப் பார்க்க விரும்பிச் சிறை அதிகாரிக்கு எழுதியிருக்கிறார்கள். நான் சிறைக்கு வந்து 20ந் தேதியோடு ஒரு மாத காலம் முடிவடைகின்றது. அதற்கு முன்னதாக, ஒரு நாள் வருமாறும் அப்படி வரும்பொழுது சேலத்திலுள்ள என் குடும்பத்தாருக்குத் தகவல் கொடுத்து அவர்களையும் கூட்டி வருமாறும் டாக்டர் ராஜன் முதலியவர்களுக்குப் பதில் கடிதம் எழுதும்படி சிறை அதிகாரியிடம் வேண்டிக் கொண்டேன். ஒரு மாதத்துக்கு ஒரு தடவை கடிதம் எழுதலாம் என்றும் ஒரு தடவை பேட்டி காணலாம் என்றும் அறிகின்றேன்.

''இரவு பகலாக வெளியே விடாமல் பூட்டி வைக்கப்பட்டிருப்பதால் நல்ல காற்றுமில்லை; உடற் பயிற்சியுமில்லை'' என்று மகமது ஹுஸேனும் நரசிம்மாச்சாரியும் அதிக வேதனைப்படுகிறார்கள். காலைக் கடன்களை முடிக்க மட்டுமே அவர்களை வெளியே கூட்டிக் கொண்டு போகிறார்கள். இந்த நேரத்தில் கிடைக்கும் காற்றும் உடற்பயிற்சியும்போதும் என்று அதிகாரிகள் எண்ணுகிறார்கள் போலும்!

## 1922 ஜனவரி. 13உ.

இன்று பெரும்பாலும் நூற்பதிலும் சாக்கிரட்டீஸ் நூலைப் படிப்பதிலுமே நேரத்தைக் கழித்தேன். ஆஸ்பத்திரியிலிருந்து என்னுடைய பழைய தனி அறைக்கு அனுப்பி விட்டார்கள்.



1. சுதந்திர பாரதத்தின் மும்மூர்த்திகள்.

2–3. சுயராஜ்யா ஆசிரியர் சந்தானம், சர்வோதயத் தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயண் ஆகியோருடன்.

4. இந்திய உயர்நீதி மன்றத்தில் உரிமைக் குரல் கொடுக்கும் பால்கிவாலா, தமிழக சட்ட மன்றத்தில் சுதந்திரக் குரல் கொடுக்கும் ஹண்டே.

5. தமிழகத்தின் தவப் புதல்வருடன் பாரதத்தின் தவப் புதல்வர்.





## தனிப்பெருந் தலைவர்களுடன் தன்னிகரில்லாத் தலைவர்





அவளுக்கு
இளமையிலேயே
கற்பியுங்கள்



# தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.

ஈறுகளை உறுதியுடனும் ஆரோக்கியத்துடனும் வைத்திருக்க, அவற்றைத் தினமும் தவறாமல் தேய்த்துக் கொடுப்பது சிறந்த வழி என்று பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள். அது போலவே, பற்சிதைவைத் தடுக்கும் சிறந்த வழி, இரவிலும் காலையிலும், ஒவ்வொரு முறை உணவருந்திய பின்னும், தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, பற்சிதைவைத் தோற்றுவிக்கும் உணவுத் துகள்களை அகற்றுவது. தவறாமல் போர்ஹென்ஸால் பற்களைத் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுக்க, உங்கள் குழந்தைக்குக் கற்பியுங்கள். ஏனெனில், போர்ஹென்ஸ் பற்பசை பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப் பட்டது.

**போர்ஹென்ஸ் பற்பராமரிப்பு பற்றிக் கற்பிக்க இதுவே தக்க வயது.**




**போர்ஹென்ஸ்**

—பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

---

**இலவசம்!** **"பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்*** பெற, 25 பைசா தபால் தலையுடன் (தபால் செலவுக்காக) கீழ்க்கண்ட கூப்பனை 'மானர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய்-1' என்னும் முகவரிக்கு அனுப்புக.

K6

பெயர் ______________________ வயது ____________

முகவரி ______________________________________

*விரும்பும் மொழியின் கீழ் கோடிடவும்—ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

101F-81-172 TM

இங்கிலாந்து கோஷ்டி இன்னும் சில நாட்களில் புது தில்லியில் இந்தியாவுடன் முதல் டெஸ்ட்டை ஆரம்பிக்கவிருக்கும் இத்தருணத்தில் ராஜாஜிக்குக் கிரிக்கெட்டில் உள்ள ஆர்வம் பற்றிய இக்கட்டுரை விசேஷ ரசனைக்குரியது. □



# 94-சதமாகட்டும்!

## விஜய் மர்ச்செண்ட்

ராஜாஜி தமது பள்ளிக்கூட, கல்லூரி நாட்களில் கிரிக்கெட் விளையாடினரோ என்னவோ எனக்குத் தெரியாது. ஆனால் அவரைப் போல் கிரிக்கெட் விளையாட்டில், அவ்விளையாட்டில் இந்தியா அடைய வேண்டிய கௌரவத்தில் ஆர்வம் கொண்ட இன்னொருவரைக் காண்பதரிது. இந்தப் பண்பு, அவர் சென்னை மாகாண பிரதம மந்திரியாக இருந்தபோதும் இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருந்த போதும் நிதர்சனமாயிற்று. என் தலைமையில் சென்னையில் நடைபெற்ற ஒரு கிரிக்கெட் விளையாட்டின் போது மெட்ராஸ் கிரிக்கெட் அசோசியேஷன் அளித்த ஒரு விருந்தில் சென்னை மாகாணப் பிரதம மந்திரியாக இருந்த ராஜாஜியைச் சந்திக்க நேர்ந்தது. நான் என் இருப்பிடத்தை விட்டு எழுந்து, ராஜாஜி இருந்த இடத்துக்குப் போய் என்னை நானே பின்வருமாறு கூறி அறிமுகப்படுத்திக்கொண்டேன். "நான் லேடி பிரேம் லீலா தாக்கர்ஸேயின் மருமகன்." ராஜாஜிக்கு லேடி தாக்கர்ஸேயை நன்கு தெரியுமாதலால், நான் அவ்வாறு அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

அவர் உடனே என் பக்கம் திரும்பி, "நீ அம்மாதிரி உன்னை அறிமுகப்படுத்திக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. உன் பெயரே போதுமானது!" என்றார் பெருந்தன்மையுடன். சில நிமிடங்கள் கழித்து, "விஜய், கிரிக்கெட் குழுவைச் சந்திக்க விரும்புகிறேன்" என்றார்.

நான், "இதோ ஒரு நொடியில் என் சகாக்களை இங்கே வரிசைப்படுத்தி நிறுத்துகிறேன்" என்றேன்.

உடனே அவர், "எதற்கு அந்த ஆர்ப்பாட்டமெல்லாம்! இந்த ஹாலில் அவர்கள் எங்கெங்கே உட்கார்ந்திருக்கிறார்களோ அந்த அந்த இடத்துக்கு என்னை அழைத்துப் போங்கள். அதுதான் எனக்கு மகிழ்ச்சியாக இருக்கும். அவர்கள் தங்கள் நண்பர்களுடன் அளவளாவிக்கொண்டிருக்கையில் அவர்களைப் பிரிக்க விரும்பவில்லை" என்றார்.

ஒரு பெரிய மாகாணத்தின் பிரதம மந்திரி மட்டுமா அவர்? நாம் கண்டுள்ள ராஜதந்திரிகளுள் மிகப் பெரியவர் ஆயிற்றே அவர்! அவரிடம்தான் என்ன அடக்கம்! அந்த எளிமையை அவரிடம் இன்றும் நாம் காண்கிறோம். அதனாலே அவர் இன்னும் உயர்ந்து விளங்குகிறார்.

* * *

கவர்னர் ஜெனரல் ஆவதற்கு முன் ராஜாஜி பூனாவுக்கு வரும்போதெல்லாம் லேடி பிரேம் லீலா தாக்கர்ஸே அவர்களின் இல்லமான "பர்ணகுடி"யில் தங்குவது வழக்கம். நமது நாட்டின் கவர்னர் ஜெனரல் ஆன பின் முதல் தடவையாக அவர் பூனாவுக்கு வரவேண்டியிருந்தது. லேடி தாக்கர்ஸே அவரைத் தம் விருந்தினராக வந்து தங்கும்படி அழைக்கத் தயங்கினார். அவர் வகிக்கும் உயர் பதவிக்கு ஏற்ற சில அரசாங்கக் கட்டுத் திட்டங்கள் உண்டு என்பதே காரணம். இதைத் தாக்கர்ஸே சீமாட்டியே என்னிடம் சொன்னார். ஆனால் அம்மையாருக்குச் சற்றும் எதிர்பாராத வியப்புக் காத்திருந்தது. ராஜாஜியே ஒரு கடிதம் எழுதியிருந்தார். பழைய வழக்கம் ஒன்றும் மாறிவிடவில்லை என்றும் அம்மையாருக்கு ஒன்றும் அசௌகரியம் இல்லையென்றால் பழைய வழக்கப்படி அவர் வீட்டிலேயே தாம் தங்க விரும்புவதாகவும் ராஜாஜி எழுதியிருந்தார்.

இப்படித் தமக்குத் தாமே அழைப்பு அனுப்பிக் கொண்ட அம்மாபெரும் மனிதரின் எளிமையை என்னென்பது! ராஜாஜி அங்கு தங்கியிருந்தபோது பலவிதமான அரசாங்க சம்பிரதாயங்களையும் ரத்துச் செய்துவிட்டார். தாம் அங்கு கவர்னர் ஜெனரலாக வந்து தங்கவில்லை என்றும் எப்போதும் போல் அந்தக் குடும்பத்தில் ஒருவனாகத் தங்கியிருப்பதாகவும் அறிவித்துவிட்டார்.

* * *

1947-48ல் இந்திய கிரிக்கெட் கோஷ்டி ஆஸ்திரேலியாவுக்குச் சென்றபோது நான் காப்டனாக நியமிக்கப்பட்டேன்.

விஜய் மர்ச்செண்ட்



அப்பொழுது எனக்கு உடல் உபாதை ஏற்பட்டதால் நான் ஆஸ்திரேலியாவுக்குப் போக முடியவில்லை. அமர்நாத் என் இடத்தை ஏற்றுக்கொண்டார். அச்சமயம் ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருந்தார். இந்தியக் குழு ஆஸ்திரேலியாவில் சுற்றுப் பயணம் செய்தபோது ராஜாஜி அமர்நாத்திடம் தொடர்பு கொண்டு, அடிக்கடி இந்தியக் கோஷ்டியினர் எப்படி விளையாடி வருகிறார்கள் என்று விசாரித்து வந்தார். அடுத்த ஆண்டு — 1948–49 — மேற்கு இந்தியத் தீவுகள் கோஷ்டியினர் இந்தியாவுக்கு வந்தபோது, அவர்கள் தில்லியில் ஒரு டெஸ்ட் மாட்ச் ஆடினார்கள். இந்திய அரசாங்கம் ஒரு விருந்தளித்தது. மேற்கு இந்தியக் கோஷ்டியினரும் இந்தியக் கோஷ்டியினரும் விருந்துக்கு வந்திருந்தனர். இங்கும் ராஜாஜி, கிரிக்கெட் கோஷ்டியினரை வரிசைப்படுத்தி நிறுத்தி அறிமுகம் செய்து கொள்ளும் சம்பிரதாயத்துக்குப் பதிலாகத் தாமே ஒவ்வொருவரிடமும் சென்று கை குலுக்கிக் குசலம் விசாரித்தார். இந்தியக் கோஷ்டியில் ஒருவரை (அவர் பெயரை நான் குறிப்பிட விரும்பவில்லை) நெருங்கியபோது, ராஜாஜி ''ஆஸ்திரேலியாவில் சென்ற ஆண்டு என்னவாயிற்று? நம் கோஷ்டியினர் ஏன் நன்றாக விளையாடவில்லை?'' என்று கேட்டார்.

அந்த ஆட்டக்காரர், ''ஆஸ்திரேலியாவில் ஒரே வெய்யிலாக இருந்தது; நம் நாட்டுச் சாப்பாடு கிடைக்கவில்லை; விக்கெட்டுகளும் கடினமாக இருந்தன...'' என்று ஆரம்பித்தார். அவர் வாக்கியத்தை முடிக்கவில்லை. ராஜாஜி இடையில் புகுந்து, ''அப்பனே! சமாதானம் சொல்ல வேண்டாம். தேவையானால் சால்ஜாப்புக்களை மற்றவர்கள் சொல்லட்டும். என் கிரிக்கெட் கோஷ்டியைச் சேர்ந்த ஒருவன் சொல்லக் கூடாது. அது நமக்கு அழகல்ல!'' என்று சொல்லிவிட்டு அப்பால் போய்விட்டார்.

இங்கு ராஜாஜி என்ற மனிதரின் நெஞ்சுறுதியையும் விளையாட்டு சம்பந்தப்பட்டமட்டில் அவருடைய மனோபாவம் என்ன என்பதையும் அறிகிறோம். அவர் சமாதானங்களை என்றும் விரும்பியவரல்ல. அவர் எது சொன்னாலும் செய்தாலும் அவற்றில் தெளிவும் உறுதியும் இருக்கும். அவர் நமது கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் கட்டுப்பாட்டுக்கு அடங்கியவர்களாகவும் ஒழுக்கம் மிக்கவர்களாகவும் கிரிக்கெட் உலகில் இந்தியாவின் பெயரை உன்னத நிலைக்குக் கொண்டு செல்லக்கூடியவர்களாகவும் விளங்கவேண்டும் என்றும் விரும்புபவர். அவர் வெற்றி தோல்வியைச் சமமாகப் பாவிக்கும் திராணியின்மை, முயற்சியின்மை, சாதகமற்ற சூழ்நிலையிலும் வெற்றி கொள்ள வேண்டும் என்ற ஆர்வமின்மை ஆகியவற்றை வெறுப்பவர்.

ஆகவே இன்று இந்தியக் கிரிக்கெட் கோஷ்டியினர் வெளிநாடுகளில் நம் கொடியை வெற்றிக்கு மேல் வெற்றியாக மிக உயரத்தில் பறக்க விட்டுக் கொண்டு வருவதைப் பார்த்து அவர் மிகவும் மகிழ்வார் என நம்புகிறேன்.

அவரது 94 சதமாகட்டும். கடவுள் அருள்வாராக!



### சிலை ஏன் வேண்டாம்?

ரோம் நகரில் கேட்டோ என்ற அறிஞர் இருந்தார். அவருக்குச் சிலை வைக்க முடிவு செய்து அவரிடம் போய் அநுமதி கேட்டார்கள். கேட்டோ அதற்கு மறுப்புத் தெரிவித்து விட்டார்.

'கேட்டோவின் சிலையை ஏன் வைக்கவில்லை? என ஜனங்கள் கேட்பதுதான் எனக்குப் பெருமை தரும். கேட்டோவின் சிலையை ஏன் வைத்தார்கள்? என்று கேட்பது எனக்குப் பெருமை தராது' எனக் கூறினாராம் கேட்டோ.

சென்னை மாநகராட்சி சில ஆண்டுகளுக்குமுன் மூதறிஞர் ராஜாஜிக்குச் சிலை எடுக்க முடிவெடுத்ததையும் அச்செய்தி தம் காதுக்கு எட்டிய கணமே மூதறிஞர் தம் சிலையை வைக்க வேண்டாம் என மறுப்புத் தெரிவித்ததையும் நாமறிவோம். ராஜாஜியின் மறுப்பிலுள்ள நியாயத்தை அவரையொத்த அறிஞர் கேட்டோவின் மேற்கண்ட நிகழ்ச்சியிலிருந்து நாம் நன்குணரலாம் அன்றோ? —வி.ச. வாசுதேவன்

# க்ளினிக் ஷாம்பூ பிரயோகம் செய்து தலைப்பொடுகினை ஒழியுங்கள்!

க்ளினிக் என்பது ஷாம்பூ ரகங்களில் ஒன்று மட்டுமல்ல. தலைமயிரிலும் அதன் அடியிலுள்ள சருமத்திலும் உள்ள தலைப்பொடுகினை உண்மையாகவே ஒழித்திட அது விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட ஒரு முற்றும் புதிய சாதனமாகும். சக்திவாய்ந்த நுண்மக்கொல்லியாகிய TCC* இதனுள் அடங்கியிருப்பதால், இது முதல் முறை கழுவும்போதே தலைப்பொடுகினை அழித்து விடுகிறது. தவறாது க்ளினிக் பிரயோகம் செய்வதன் மூலம், தலைப்பொடுகு பரவுவதிலிருந்து நீடித்த பாதுகாப்பைப் பெறலாம்.

தலைப்பொடுகினை மட்டுமே க்ளினிக் ஒழிக்கிறதே அன்றி தலைமயிருக்கு எத்தவித சேதமும் ஏற்படுத்துவதில்லை. மற்ற மருந்து கலக்கப்பட்ட ஷாம்பூக்களைவிட அது அதிக இதமளிக்கிறது. ஏனென்றால், அதனுள்ளேயே தலைமயிருக்குப் பாதுகாப்பளிக்கும் சாதனம் அடங்கியுள்ளது. தலைமயிர் அழகாகவும், உறுதியாகவும், பளபளப்புடனும் இருக்க உதவுகிறது க்ளினிக்.

* 0.15% 3.4.4 ட்ரைக்ளோரோ கார்பானிலைட்




## க்ளினிக் பிரயோகம் செய்யும் முறை



TCC* என்னும் புதிய நுண்மக்கொல்லி உடனேயே செயல்பட்டுத் தலைப்பொடுகினை அகற்றி விடுகிறது. உபயோகத்திற்கு இடையிடையே பாதுகாப்பளிக்கிறது.



2வது முறை பெருகும் நுரையினைத் தலையிலேயே ஒரு நிமிடம் இருக்க விடுங்கள். அப்பொழுதுதான் க்ளினிக்கின் ஃபார்முலா அடிவரையில் ஊடுருவிச்சென்று நல்ல சக்தியுடன் செயல்படும்.



அடிவரை ஊடுருவிச் சென்று செயல்படும் இதமான திரவகமாதலால் தலைப் பொடுகினை அழித்து தலைமயிரை அழகுடனும் உறுதியுடனும் வைக்கிறது.



வாரம் ஒரு முறையாவது க்ளினிக் தவறாது பிரயோகம் செய்யுங்கள். தலைப் பொடுகிலிருந்து நீடித்த பாதுகாப்பைப் பெறுங்கள்.

# க்ளினிக் ஷாம்பூ

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

HLC-5141 A

# கனவுகளுக்கு அப்பால்...

கோமகள்

உஷா பி. ஏ. முடித்து விட்டாள்.

அடுத்தது என்ன என்ற கேள்வி அந்த வீட்டையே சூழ்ந்து கொண்டது. நான்கு வருடங்களுக்கு முன் ஒரு தரம் பள்ளி இறுதித் தேர்வு முடிவுகள் வெளிவந்த பத்திரிகையைப் புரட்டிவிட்டு, "அப்பா! நான் பாஸ்!" என்று குதியோ குதி என்று உஷா குதித்தாளே, அன்றுகூட இதுபோல் ஒரு கேள்வி அந்த வீட்டைச் சூழ்ந்ததுண்டு. அடுத்து உஷாவுக்குக் கல்யாணமா, கல்லூரியா என்ற கேள்விக்கு மற்றவர்களை விடையளிக்க விடவில்லை அவள். அப்பா பணத்துக்குப் பயந்ததையும், அம்மா கல்யாணத்துக்குப் பறந்ததையும் அவள் சுலபமாக ஒதுக்கி விட்டாள்.

அவள் கல்லூரியில் சேர்ந்து விட்டாள். கொஞ்ச நாட்கள் அவளை அவர்கள் இடித்துப் புடைத்துவிட்டு சகஜநிலைக்கு வந்துவிட்டனர். அப்புறம் அந்த நான்கு வருடங்கள் ஓடினதே தெரியவில்லை.

ஆனால் இனிமேல்....?

படித்த படிப்புக்கு உத்தியோகமா? வயதாகி விட்டதே என்று கல்யாணமா?

"உஷா! மேலே என்ன பண்ணறதாக உத்தேசம்?" அப்பா அவளிடம் மகள் என்ற உறவை மீறி, ஒரு கற்று உணர்ந்தவளிடம் யோசனை கேட்கும் ரீதியில் கேட்கிறார்.

"உங்கள் விருப்பம் அப்பா!"

"அப்பமன்னு கல்யாணம்னு அர்த்தம். இல்லையா உஷா?"

"அப்படி இல்லை அப்பா. இந்தக் கால வழக்கப்படி நானும் வேலைக்குப் போய்ச் சம்பாதித்துக் கொண்டு வந்து உங்களுக்கு உதவலாம் என்றுதான் நினைக்கிறேன்."

அப்பா பக பகவென்று சிரிக்கிறார். "ஏம்மா உஷா! உன்னைச் சம்பாதிக்கிறதுக்கா படிக்க வைச்சேன்?"

உஷா விழித்தாள். "ஏம்ப்பா இப்படிச் சொல்றீங்க?"

"பின்னே எப்படிச் சொல்லறது? பெற்ற குழந்தைகள் ஒன்றை விரும்பி, அதைத் தகப்பன் தந்தான்னு, அதுக்குப் பிரதியா, தன் இளமைக் காலத்தை வீணாக்கி விட்டுப் பொருள் சேர்த்துத் தரணும்னு நினைப்பானு? நீ படிச்ச படிப்பு இந்த லோகத்தைப் புரிஞ்சுக்கவும், உன் புருஷனுக்கு உதவி பண்ணவும் உன் குழந்தைகளுக்குச் சொல்லித் தரவும் உதவட்டுமே அம்மா..."

உஷா அவர் கூற்றை மறுக்கவில்லை.

அப்பா வரன் பார்க்கத் தயாரானதும் அம்மா தன் மனத்துக்குள் கணித்து வைத்திருந்த வரன்களைப் பற்றி மடமடவென்று கூற ஆரம்பித்தாள். அதிக முக்கியமான வரன் அவள் ஒன்றுவிட்ட அண்ணா பிள்ளையான தியாகு.

"தியாகுவுக்கா?" அப்பா ஏளனமாகச் சிரித்தார். "என் பெண் பி. ஏ. !"

அம்மாவுக்கு முகம் கண்டிவிட்டது.

அதை மேலும் கண்டும் விதமாக அப்பா "என் பெண்ணை டபுள் கிராஜுவேட்டுக்குத்தான் தருவேனுக்கும்!" என்றார்.

சொன்னபடி 'டபிள் கிராஜுவேட்'டாக ஒன்றல்ல, ஐந்து வரன்களைக் கொண்டு வந்தார் அப்பா. ஆனால் சொல்லி வைத்தாற்



போல் ஐந்து பேரும் உஷாவின் பி. ஏ. பட்டத்தையோ, கொள்ளையிடத் தூண்டும் அழகையோ வெறுமனே கொள்ள வரவில்லை. தங்க மயமான சொரூபத்தைத் தங்கத் தட்டில் வைத்தல்லவா கேட்கிறார்கள்? ஆனால் அலைந்தலைந்து அந்த அனுபவமும் ஓர் உரமாகிப் புது எண்ணம் கிளர்ந்தது.

உஷா வேலைக்கே போயிருக்கலாம். இந்த மூன்று வருட காலத்தில் அவள் சம்பாதித்ததைச் சேர்த்து வைத்திருந்தால் கூட அவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறவனிடம் கொட்டித் தரலாம். அந்த விதத்திலுமல்லவா நஷ்டம் ஆகிவிட்டது?

"அப்பா!" மிகத் தயக்கமான குரலோடும் ஆனால் மிக உறுதியான மிடுக்கோடும் அவரிடம் வந்தாள் உஷா.

"என்னம்மா?"

"நான் ஒரு தீர்மானத்துக்கு வந்திருக்கிறேன் அப்பா!" என்று ஒரு கடிதத்தை அவரிடம் நீட்டினாள். "உங்கள் ஆபீஸிலேயே ஒரு வேலைக்கு மனுப் போட்டிருக்கிறேன். இண்டர்வியூ வந்துள்ளது. நீங்கள் சொன்னால் உங்கள் மானேஜர் மறுக்க மாட்டாராமே அப்பா!"

"என்னம்மா இதெல்லாம்? உன்னை வேலைக்கு அனுப்பும் உத்தேசம் இல்லாமல்

தானே நான் திருமணத்துக்கு வரன் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.''

''உங்கள் முயற்சிக்குக்கூட நான் வேலைக்குப் போவது 'அடிஷனல் க்வாலிபிகேஷன்' தான் அப்பா!''

''என்னம்மா சொல்லறே நீ?''

''ஆமாம் அப்பா! ஒரு பெண்ணுக்கு மண வாழ்க்கை தேவைன்னு வரப்போற ஆணுக்கு என்னென்ன சௌகரியங்கள் தேவைன்னு அர்த்தம் அப்பா! நீங்கள் கஷ்டப்பட்டு என்ன பயன்? வருகிறவர்களெல்லாம் எது தேவைன்னு ஒன்றையே சொல்கிறார்களோ, அது நம்கிட்டே இல்லாதவரை நீங்க என் கல்யாணத்தைப் பற்றி யோசிக்க என்ன பிரயோசனம் அப்பா?''

அப்பா வெகு நேரம் மௌனமாக இருந்தார். அப்புறம் அதைப் பற்றி ஒன்றும் பேசாமல் இண்டர்வ்யூக்குப் போய் வந்தாள் உஷா. அன்று சாயந்திரமே அப்பா ''நாளன்னிக்கு உனக்கு ஆர்டர் வரும்மா!'' என்றார். ஒரு பெண்ணுக்கு வரன் தேடுவதை விட வேலை தேடுவது சுலபம் என்பதைக் கசப்போடு உணர்ந்து கொண்டிருந்தார் அவர்.

இந்த நாடகத்தைப் பார்த்தும் பாராதவளாக இருந்த அம்மா இப்போது வாய் திறந்தாள். ''கல்யாண முயற்சிக்கு முடிவு கட்டிட்டீங்களா?''

''கொஞ்சம் ஆறப் போட்டுத்தான் ஆரம்பிக்கப் போகிறேன்'' என்ற அப்பாவின் குரலில் மிடுக்கு இல்லை. ஏதோ தப்புச் செய்து விட்ட தயக்கம் தெரிந்தது.

''யாருவோட அப்பா அன்னிக்குக் கூடப் பார்த்துச் சொன்னார்.... நம்ப உஷா மேலே



அவருக்கு இருக்கிற பிரியம் யாருக்கும் இருக்காது...''

''ஆனால் உஷாவுக்கு இருக்கணுமே?''

''ஏன், எத்துக்கறதுக்கென்ன? நல்ல பண வசதி இருக்கு தியாகுவுக்கு. சொந்தக்காரர்கள். அன்பாக, பிரியமாக நடத்துவார்கள். முக்கியமாக நம்மிடமிருந்து பணம் எதிர்பார்க்க மாட்டார்கள். நாம் இஷ்டப்பட்டுச் செய்யறது போதும். பின்னாலேயும் நம்ப பெண் நமக்கு ஆதரவாக இருக்கத் தியாகுவாலே சௌகரியமாக இருக்கும்...''

அவள் கூறுவதென்னவோ உண்மைதான்!

ஆனால் தம் கையாலாகாத்தனத்தையே கூறுவது போல் நாம் இதுவரை மறுத்து வந்த தியாகுவை 'நீ மணந்து கொள்கிறாயா அம்மா?' என்று மகளிடம் அவர் எப்படி வாய் திறந்து கேட்பார்? அவளுக்குத்தான் அப்படி அபிப்பிராயம் இருந்திருந்தாலும் வேலைக்குப் போகிறேன் என்று புறப்பட்டவள் தியாகுவை மணக்கிறேன் என்று கோடி காட்டியிருக்க மாட்டாளா?

அந்த வீட்டில் அந்தப் பிரச்னைக்குச் சற்று ஓய்வு கொடுத்த பின் உஷாவும் அப்பாவுடன் வேலைக்குப் போக ஆரம்பித்தாள்.

உஷா ஒரு நாள் தன் தோழியின் வீட்டுக்குப் போயிருந்தாள். அப்போது அம்மா ஒரு புதுப் பேனாவை எடுத்து வந்து அப்பாவிடம் காட்டினாள். ''இந்தப் பேனாவை உஷாவுக்கு வாங்கித் தந்தீர்களா?''

''இல்லையே?'' என்று கூறும்போதே அவருள் ஏதோ நடுங்குவது போலிருந்தது.

''பின்னே இது ஏது?''

''யார் பேனாவையாவது தவறுதலாக எடுத்து வந்துவிட்டிருப்பாள்.''

உஷா அப்போதுதான் உள்ளே வந்தாள்.

அவளை உடனே அம்மா கேட்டுவிட்டாள். தன் தோழி ஒருத்தி பரிசளித்ததாக அவள் கூறியதைக் கேட்டு அப்பா திடுக்கிட்டார். இருபத்தைந்து ரூபாய்ப் பேனாவை ஒரு தோழி பரிசளித்திருக்கக் கூடுமா என்ற ஐயமே அவரைத் தூக்கி வாரிப் போட்டது.

மறுபடியும் இன்னொரு நாள். அம்மா அவரிடம் உஷாவின் பெட்டியில் இரண்டு பிளவுஸ் துணிகளும், ஒரு புடவையும் செயற்கை முத்து மாலை ஒன்றும் இருப்பதாகக் கூறிவிட்டு ''என் வயிற்றில் நெருப்பைக் கொட்டிக் கொண்டாற் போலிருக்கிறது. அவள் சம்பாதித்த வரை போதும். முதலில் எவனுக்காவது அவளைக் கட்டி வையுங்கள். இந்தக் காலத்துப் பெண்களை யாரும் நம்ப முடிவதில்லை'' என்று அச்சுறுத்தினாள்.

அப்பாவுக்குப் 'பகீர்' என்றது. இருவரும் ஒரே அலுவலகம் என்றாலும் அவர் செக்ஷன் ஹெட் என்பதால் முதல் பஸ்ஸிலேயே போய் விடுகிறார். உஷா அடுத்த பஸ்ஸில் வருகிறாள். திரும்பும்போதும் அவள் முதலில் வந்து விடுகிறாள். எனவே அவர் அவளைக் கண்காணித்ததோ, கவனித்ததோ இல்லைதான். என்றாலும் சந்தேகாஸ்பதமாக அவள் நடந்துகொண்டதே இல்லை என்பதை நினைத்துப் பார்த்தார்.

மாசுமறுவற்ற அவள் உள்ளத்தை எவனாவது வஞ்சகமாகக் கவர முயன்று வெற்றியும் பெற்று விட்டானோ?

அன்று மாலை உஷா புறப்படும்போதே திட்டமிட்டு அவரும் அலுவலகத்தை விட்டுப் புறப்பட்டுஅவளறியாமல் பின்தொடர்ந்தார். அவர் அச்சத்தோடு எதிர்பார்த்தபடி உஷா பஸ் ஸ்டாண்டை விட்டு விலகிச் சற்றுத் தூரத்தில் நின்றாள். அங்கு யாரோ ஒரு வாலிபன் நிற்கிறான். அவன் முகம் தெரியவில்லை. ஆனால் உஷாவின் முகம், பேச்சு எல்லாம் புரிகின்றன. அவள் சகஜமாக உரையாடுகிறாள். அவர் மனம் 'பட் பட்' என்று அடித்துக் கொண்டது. உஷாவுக்குக் கூடத் திருட்டுத்தனம் வருமா? வந்த பஸ்ஸில் உஷா சட்டென்று ஏறிவிடவும் அவர் கவனமாக அந்த வாலிபன் முகத்தையே குறி வைத்து நடந்தார். அவன் இதோ திரும்புகிறான். உயர் ரகத் துணிகளில் பேண்டும் ஷர்ட்டும் பளிச்சிடுகின்றன. அட! யார் அது...? தியாகுவா... தியாகுவேதான்! அவருக்கு மயக்கம் வரும்போலிருந்தது.

''மாமா சௌக்கியமா?'' தியாகு அவரைப் பார்த்து இங்கிதமாக விசாரித்தான்.

''சௌக்கியந்தான் தியாகு! எங்கே இத்தனை தூரம்?'' அவனை ஆழம் பார்த்தார். பயல் அழகாகத்தான் இருக்கிறான்!

''வேண்டியவர் ஒருத்தரை பஸ் ஏற்ற வந்தேன் மாமா!'' என்ன புளுகு...! இந்தத் தலைமுறையின் சாகஸங்களை எண்ணி அவர் வியந்தாலும் வழி நெடுக அவரால் தியாகுவை உஷாவுக்கு ஏற்றவனாக ஏற்க முடியவில்லை. அது எப்படிப் பொருந்தும்? ஒரு பி.ஏ. படித்த பெண்ணுக்கு ஓர் எஸ். எஸ். எல். சி. பெயிலான மணமகனா?

''உஷா! இங்கே வா!'' விசாரணை செய்ய முயலும் அழுத்தலோடு மகளை அழைத்தார்.

''என்னப்பா?'' — பாரேன், இந்தப் பூனையும் பால் குடிக்குமா என்று நிற்பதை!

''உனக்குச் சீக்கிரமே கல்யாணத்தை முடிச்சிடணும்னு நினைச்சிருக்கேன்!''

''நானே அதை உங்கள்கிட்டே சொல்லணும்னு இருந்தேன் அப்பா!''

''அப்போ... நீ... யாரையாவது பார்த்து வச்சிருக்கே.... அப்படித்தானே?'' அவர் தம் குரலில் கடுமையை ஏற்றிக் கொண்டார்.

''இது என்ன கூத்து?'' என்று பதறினாள் அம்மா. ''என்னடி உஷா உங்கப்பா சொல்றார்?''

''அப்பா சொல்றது வாஸ்தவம்தான் அம்மா. நான் தியாகுவைக் கல்யாணம் பண்ணிக்கிறதாகத்தான் இருக்கேன்!''

''அடீ எனக்குத் தலையும் புரியலே, காலும் புரியலே! எப்படி நீ இந்த முடிவுக்கு வந்தே?'' என்றாள் அம்மா. அவள் குரலில் திருப்தியும் ஆச்சரியமும் கலந்திருந்தன.

''நீதான் சொல்லிக் கொண்டே யிருப்பாயே அம்மா. என்னை அறியாமல் என் மனசிலே படிஞ்சுட்டது போலிருக்கு. ஆனால் அப்பா மறுத்தவாறே இருந்தார்....''

''உம்! அப்புறம்?'' இந்தக் காலத்துப் பெண்ணின் போக்கை அவளால் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

# சாதாரண காப்பிகளுக்கு எதிரான புரட்சியில் சேருங்கள்!

வற்புறுத்தி
வாங்குங்கள்
ஒரு ஸ்பெஷல் காபி

விசேஷ செறிவு:
விசேஷ நிறம்:
விசேஷ பாக்கிங்:

விலை
ரூ. 2.87
வரிகள் தனி.




புதியது!
'அதி-ஸ்ட்ராங்கான'

# ரிக்கரி®
இன்ஸ்டன்ட்

இது விசேஷமானது!
நெஸ்கஃபே தயாரிப்பாளர்கள் அளிப்பது

ACIL-R-625 (3) TAM

''ஒவ்வொரு நாளும் இதைப் பற்றி நான் தீவிரமாகச் சிந்திக்க ஆரம்பிச்சேன். பி.ஏ. படிச்ச ஆண் ஐந்தாம் வகுப்புக்கூடப் படிக்காத பெண்ணைத் திருமணம் செய்துகொண்டு வாழ்க்கை நடத்தறபோது பி. ஏ. படித்த பெண் எஸ். எஸ். எல். சி. படித்த ஆணைத் திருமணம் செய்து கொண்டு வெற்றிகரமாக வாழ முடியாதான்னு யோசிச்சேன். கொஞ்ச நாட்களிலேயே அது நியாயமாகப்பட்டது...ஒரு நாள் அத்தானுடைய கடையிலேயே ஒரு பேனு வாங்க வேண்டும்னு போனேன்...''

''பார்த்தீங்களா...? பார்த்தீங்களா உங்க பெண்ணை...?'' அதிசயித்தாள் அம்மா.

''அவரது மனம், குணம் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டால் நல்லதுன்னு நினைச்சேன். தான் படிக்கவில்லேங்கிறதினுலே அவருக்குத் தாழ்வு மனப்பான்மை இருந்தால் சரிப்படாதில்லையா? ஆனல் அவருக்குத் தாழ்வு மனப்பான்மை துளியும் இல்லே. என்னைக் கல்யாணம் பண்ணிக்கவும் அவருக்கு விருப்பம்தான்னு புரிஞ்சுகிட்டேன். அப்பா! நான் இப்படிச் செய்தது தப்புத்தான்னு என்னை மன்னிச்சுடுங்க. ஆராய்ந்து பார்க்காமல் துணியக் கூடாதில்லையா?''

அப்பா அவளை விநோதமாகப் பார்த்தார்.

''நீங்கள் அத்தானைப் படிக்கவில்லே, படிக்கவில்லே என்று குத்திக்கொண்டே இருந்தீர்கள். எனவே நான் அவரோடு பழகிப் பார்த்தேன் உங்கள் கோணத்திலிருந்தும் நான் பிரச்னையே ஆராய்ந்தேன், அப்பா! நான் கல்லூரியில் படித்திருக்கிறேன். வாஸ்தவம்தான்! ஆனல் எந்த வாலிபன் என்னை வலிய ஏற்க முன்வந்தான்? எந்த இளம் பருவம் என் அழகை, என் கல்வியைக் கௌரவிக்க முன் வந்தது? 'பணம், பணம்' என்று அதையே குறிக்கோளாகக் கொண்டு மற்றவற்றை இரண்டாம் பட்சமாகத் தள்ளியவர்களிடையே கல்லூரிக்குள் நுழையாத தியாகு எல்லாம் உணர்ந்த மேன்மையோடும், விவேகத்தோடும் நடந்து கொள்கிறர். அதுமட்டுமல்ல. தாம் கல்லூரியில் படிக்கவில்லையே என்று அவர் ஆதங்கப்படவில்லே. தம்



தொழிலுக்கு இந்தப் படிப்பே போதும் என்று நிறைவுடன் நினைக்கிருர். எங்களுக்குள் எவ்வளவோ ஒற்றுமைகள் இருக்கின்றன அப்பா! கலே, இலக்கியம் பற்றிய அபிப்பிராயங்கள், வாழ்வின் ஒவ்வொரு மூலையையும் ரசிக்கும் இயல்புகள் எல்லாமே மாறுபடாமல் வேறுபடாமல் ஒத்திருக்கின்றன....''

''நீ பி.ஏ. படித்தவளாயிற்றே அம்மா. எனக்கு அது பெரிய குறையாக இருக்குமே?'' நெகிழ்ந்தவாறே கூறிஞர் அவர்.

''ஒரு பி.ஏ. பட்டத்தை வைத்துக்கொண்டு எனக்கு ஏற்றவரை, என்னை ஏற்கத் துடிப்பவரை, எங்கள் இருவர் வாழ்விலும் விளையும் பயன்களை, ஏற்படும் பாதுகாப்புக்களை, உண்டாகி நிலேக்க இருக்கும் உறவுகளை அறுத்துக் கொள்ள வேண்டாம் என்றுதான் பார்க்கிறேன் அப்பா...!''

அவளது சாதுரியமான குரலின் திருப்தியும், பேச்சின் தீர்வும் அவரைச் சமாதானப் படுத்தி விட்டனவோ என்னவோ? ''நான் தியாகுவைப் போய்ப் பார்க்கிறேன் அம்மா!'' என்று கூறிஞர் அவர்.

''அவரே இன்று உங்களைப் பார்க்க வருகிறர், அப்பா!''

''என் உஷா கெட்டிக்காரிதான்!'' என்ருள் அம்மா.

''ஏனம்மா! தியாகுவாக இல்லாமல் வேறு ஒருத்தராக இருந்தால் இந்த வார்த்தையைக் கூறுவாயா நீ?'' என்ருள் உஷா.

''அப்படிக் கேள்!'' என்ருர் அப்பா.

தியாகு தன் தந்தையுடன் படியேறிக் கொண்டிருந்தான்.

பூனைக் குட்டியைப் போல் ஒரே தாவாக உள்ளே ஓடிப் பதுங்கிக் கொண்டாள் உஷா.

அவளது இளம் நெஞ்சு எவ்வளவோ கனவுகள் கண்டிருக்கலாம். ஆயினும் கனவுகளுக்கு அப்பால் ஒரு வாழ்வு உண்டு என்ற உண்மையை அவளது விவேகம் உணர்ந்து விட்டிருக்கிறது என்பதைப் பூரிப்போடு தெரிந்து கொண்டார் அவன் அப்பா.

## அன்புப் பேச்சு

படங்களைக் காட்டிக்காட்டி நாங்கள் ஒவ்வொரும் பிரசங்கம் செய்வதுண்டு. படங்களின் உதவியில்லாமல் வாசாமகோசரமாக மதுவின் தீமைகளைப் பற்றிப் பேசுவதும் உண்டு. ஆயினும் ராஜாஜி பேசும்போது கிராமத்து ஜனங்களின் மனத்திலே பதிவதுபோல் எங்களுடைய பேச்சு பதிவதில்லே. ஏனெனில், ராஜாஜியைப் போலக் கிராமத்து ஜனங்களின் கஷ்டங்களை நாங்கள் உணரவில்லே. எங்களுடைய பேச்செல்லாம் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் பிள்ளைகளுக்குப் பாடம் கற்பிப்பது போல் இருக்கும். ராஜாஜியின் பேச்சோ குழந்தையிடம் உயிரை வைத்திருக்கும் தாயார் அன்புடன் புத்தி சொல்வது போலிருக்கும்.

- 'பாங்கர் விநாயகராவ்' நூலின் முன்னுரையில் கல்கி.

— வி .ச. வாசுதேவன்



# சத்திய வெள்ளம்

நா. பார்த்தசாரதி

## இருபத்துமூன்றாவது அத்தியாயம்

"நீ தேடி வந்தேன்னு எங்க விட்டிலே சொன்னுங்க. நான் எதிர்பார்த்ததை விடச் சீக்கிரமாகவே திரும்பிட்டேன். நீ மறுபடியும் ஒன்பது மணிக்கு வருவேன்னும் வீட்டிலே தெரிஞ்சுக்கிட்டேன். உடனே நீ இங்கேதான் வந்திருக்கணும்னு புறப்பட்டு வந்தேன்" என்ருர் மணவாளன். பாண்டியனுக்கு அவருடைய எதிர்பாராத வரவு கனவிலிருந்து அடித்து எழுப்பியது போல் இருந்தது.

"என்ன உங்க ஊர்ப் பக்கம் எல்லாம் ஸ்டூடன்ட்ஸ் எப்பிடி இருக்காங்க?" என்று பாண்டியனைக் கேட்டார் மணவாளன். "எல்லா ஊர்லியும் 'மல்லிகைப் பந்தல் ஸ்பிரிட்'தான் இருக்கு. சுயநலமும் எதேச்சாதிகாரமும், பதவி வெறியும் எங்கும் எதிர்ப்பு உணர்ச்சியைத்தான் உண்டாக்கி யிருக்கின்றன. மனமும் சிந்தனையும் வளராத சிலர் மட்டுமே இன்னும் துதி பாடிகளாக இருக்கிருர்கள். மேரி தங்கத்தின் தற்கொலை விஷயம் வெளியே பரவிப் பத்திரிகைகளில் சிரிப்பாய்ச் சிரித்த பிறகு எல்லா இடங்களிலும் எதிர்ப்பு உணர்ச்சிதான் வலுவாயிருக்கிறது" என்ருன் பாண்டியன்.

"உனக்குத் தெரியுமோ பாண்டியன்? நேற்றுத்தான் நிலக்கோட்டையிலிருந்து வந்த ஒருத்தர் சொன்னுர், மேரி தங்கத்தின் பெற்ருேர்கள் வாழைத் தோட்டத்துச் சிறையிலிருந்து வெளி வந்து இப்போதுதான் சில நாட்களாக ஊரில் சகஜமாக நடமாடுகிருர்களாம். மிஸ்டர் சற்குணம் இன்னும் கூட மற்றவர்களிடம் பேசப் பயந்து நடுங்குகிருராம்."

"அவரைப் போல் பயந்து நடுங்குகிறவர்கள் இருக்கிற வரையில் இந்த நாட்டில் சுயநலமிகள் பாடு கொண்டாட்டம்தான்."

இதற்குள் கண்ணுக்கினியாள் உள்ளே போய் அவர்கள் இருவருக்கும் காப்பி கொண்டு வந்திருந்தாள்.

"எங்கேம்மா நாயினு இல்லியா?" என்று அவளிடமிருந்து காப்பியை வாங்கிக் கொண்டே விசாரித்தார் மணவாளன். நாயினுவும் அம்மாவும் ஆடி வீதிக்குக் கதை கேட்கப் போயிருப்பதாகச் சொன்னுள் அவள்.

"நீ தனியாத்தான் இருக்கியா? அதான்..." என்று ஏதோ சொல்லத் தொடங்கிய மணவாளன் பாண்டியனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே மேலே பேசாமல் நிறுத்தி விட்டார்.

"பட்டமளிப்பு விழாவப்ப ஒரு பெரிய போராட்டம் நடத்தப் போருேம். யுனிவர்ஸிடியிலே படிக்கிற எல்லாப் பிரிவு மாணவர்களோட ஆதரவும் வேணும். உன்ஞலே நிறையக் காரியம் ஆக வேண்டியிருக்கும்மா. நீ மனசு வைத்தால் முடியும்" என்ருர் மணவாளன்.

"அண்ணனைப் போல் மாணவர் தலைவர்கள் இப்படி வேண்டக் கூடாது! உரிமையோடு எங்களுக்குக் கட்டளை இட வேண்டும்" என்ருள் அவள். மிகவும் தன்னடக்கமாக அவள் இப்படிப் பதில் பேசியது மணவாளனுக்கும் பாண்டியனுக்கும் பிடித்திருந்தது.

"இந்தப் பட்டமளிப்பு விழாப் போராட்டம் முடிந்ததும் அகில இந்திய தேசிய மாணவர் சம்மேளனத்தின் சார்பில் பல்கலைக் கழக மாணவர் மகாநாடு ஒன்றையும் மல்லிகைப்பந்தலில் நடத்தப் போகிருேம்."

"பிரமாதமா நடத்தலாம். மாணவிகளின் ஒத்துழைப்பு முழு அளவில் இருக்கும்."

"நிதி வசூலுக்கு இரண்டு நாடகங்களாவது போட வேண்டியிருக்கும். செலவு நிறைய ஆகும்."

சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்த பின் பாண்டியனையும் உடனழைத்துக் கொண்டு மணவாளன் புறப்பட்டார். இருவரையும் இரவு ஒன்பது ஒன்பதரை மணிக்குள் அங்கே சாப்பிட வருமாறு அழைத்தாள் அவள்.

"நாங்கள் நாலைந்து கல்லூரி விடுதிகளுக்குப் போய் மாணவர்களைச் சந்தித்துப் பேச வேண்டியிருக்கிறது

அம்மா! போகிற இடங்களில் எங்கே எத்தனை மணிக்கு நாங்கள் சாப்பிட நேரிடும் என்பதைச் சொல்ல முடியாது. நீ வேறு எங்களுக்காக இங்கே சாப்பாட்டை வைத்துக் கொண்டு காத்திருக்க வேண்டாம்'' என்று மணவாளன் அதை மறுத்து விட்டார்.

''காலையில் முதல் பஸ்ஸில் புறப்பட்டு நான் மல்லிகைப்பந்தலுக்குப் போய் விடுவேன். நீ நாளன்றைக்குப் புறப்பட்டு வருகிறாயாக்கும்?'' என்று அவளிடம் விசாரிப்பது போல் தனக்கு ஏற்கனவே தெரிந்ததையே மறுபடியும் கேட்டுவிட்டு விடைபெற்றான் பாண்டியன்.

''நாயினு வந்தா எங்கேன்னு விசாரிப்பாங்க. மறுபடியும் வந்து அவரைப் பார்த்துச் சொல்லிட்டுப் போங்களேன்'' என்றாள் அவள். பாண்டியன் சிரித்தான். தன்னை அவள் மறுபடியும் அங்கே வரவழைக்க முயல்வது அவனுக்குப் புரிந்தது.

முதலில் நகரை விட்டுச் சற்றே ஒதுக்குப்புறமாக இருந்த ஒரு கல்லூரி விடுதிக்குச் சென்றார்கள் அவர்கள். விடுதியின் மாணவர்களைச் சந்தித்துப் பேசியபோது அந்த மாணவர்கள் மணவாளனிடமும் பாண்டியனிடமும் ஒரு குறையை முறையிட்டார்கள். அந்தக் கல்லூரியில் குறுகிய நோக்கமுள்ள ஒரு பேராசிரியர் வகுப்புக்கு வராமல் பாடத்தை விட்டு விட்டுத் தமிழ் நாடு தனியே பிரிய வேண்டும் என்று பிரசாரம் செய்வதாகவும் அவரே கல்லூரித் தமிழ் மன்ற விழாக்களிலோ, பேரவைக் கூட்டங்களிலோ முடிவில் தேசிய கீதம் பாடப்படுவதைத் தடுக்கிறார் என்பதாகவும் ஒரு முறை மாணவர் விழாவில் அந்தப் பேராசிரியரே ஆத்திரமாக எழுந்து ஓடி வந்து, ஒலி பெருக்கிக்காரன் கையிலிருந்து தேசிய கீத 'ரிக்கார்டை' வலியப் பிடுங்கி உடைத்து விட்டதாகவும் மாணவர்கள் வருத்தப்பட்டார்கள். இந்தச் சம்பவத்தைப் பற்றிக் கேள்விப்பட்டதுமே மணவாளனுக்குத் தாங்க முடியாத கோபம் வந்துவிட்டது.

''தெய்வ பக்தி இல்லாதவர்களையாவது நாத்திகர்கள் என்று ஒதுக்கிவிட முடியும். தேசபக்தி இல்லாதவர்களை மனிதர்களாகவே கருதக் கூடாது. அவர்களை மனித இனத்திலிருந்தே ஒதுக்கி வைக்க வேண்டும். தெய்வ பக்தியற்றவர்களை நாம் மன்னிக்க முடியும். ஆனால் தேசபக்தி யற்றவர்களை ஒருபோதும் மன்னிக்க முடியாது; மன்னிக்கவும் கூடாது... இனிமேல் என்றைக்காவது வகுப்புக்குள்ளோ கல்லூரி எல்லையிலோ அந்தப் பேராசிரியர் தேசிய கீதத்தை எதிர்த்தோ, தேச ஒற்றுமையை எதிர்த்தோ பிரசாரம் செய்தால் அவரை வளைத்து மடக்கி 'கேராவ்' செய்யுங்கள். மன்னிப்புக் கேட்கிறவரை விடாதீர்கள். அப்புறம்தான் அவருக்குப் புத்தி வரும்.''

கல்லூரி 'க்விஸ் புரோகிரா'மில் ஒரு விரிவுரையாளர் 'இன்ன அமைச்சரின்



மனைவி பெயர் என்ன?' என்பதுபோல் ஒரு கேள்வி கேட்டதாகவும், ''அந்த அமைச்சரின் எத்தனையாவது மனைவியைப் பற்றிக் கேட்கிறீர்கள்?'' என்று பதில் கூறிய மாணவன் திகைத்துப் போய் எதிர்க் கேள்வி போட்டதாகவும் ஒரு சம்பவத்தை மற்றொரு மாணவன் விவரித்தான். சிறிது நேரத்துக்குப் பின் தாங்கள் கொண்டு வந்திருந்த துண்டுப் பிரசுரங்களையும் நிதி வசூலுக்கான இரசீதுப் புத்தகங்களையும் அந்த விடுதி மாணவர்களில் சிலரிடம் ஒப்படைத்து விட்டுப் புறப்பட்டார்கள், மணவாளனும் பாண்டியனும். இரவு பத்து மணிக்குள் இப்படியே இன்னும் இரண்டு மூன்று கல்லூரிகளைப் பார்த்து முடித்த பின் அவர்கள் வீடு திரும்பினார்கள். நடுவில் ஒரு கல்லூரி விடுதியில் அவர்

களுடைய இரவு உணவு முடிந்திருந்தது. சில இடங்களில் போலீஸ் சி. ஐ. டி. ஆட்கள் தங்களைப் பின்தொடர்வதை அவர்களே உணர முடிந்தது. அங்கங்கே பார்க்க வேண்டியவர்களைப் பார்த்து விட்டு மணவாளனின் வீட்டுக்குத் திரும்பியதும் பட்டமளிப்பு விழாவுக்கு ஒரு வாரம் முன்னதாகவே அவர் மல்லிகைப் பந்தலுக்கு வந்து சேர்ந்து விடவேண்டும் என்று அவரிடம் வற்புறுத்தினன் பாண்டியன். ''ஒரு இண்டர்வ்யூவுக்கு பம்பாய் போய் வரணும். போகலாமா விட்டு விடலாமா என்று யோசிச்சுக்கிட்டிருக்கேன். 'எங்கேயும் போய் நிற்க வேண்டாம். நீயே ஒரு 'கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனி'ன்னு போர்டு மாட்டிக்கிட்டு உட்காரு'ங்கிருங்க வீட்டிலே. பம்பாய் போகலேன்னு ஒரு வாரத்துக்கு முன்னுடியே அங்கே வந்திடலாம். எதுக்கும் நான் உனக்குக் கடிதம் எழுதறேன் பாண்டியன்!'' என்ருர் மணவாளன். பொழில்வளவனுரையும் பண்புச் செழியனையும் படக் கடை வாயிலில் பார்த்ததைப் பற்றி மணவாளனிடம் சொன்னுன் பாண்டியன்.

''அவங்க ரெண்டு பேருமாச் சேர்ந்து மல்லிகைப் பந்தலிலேயே ஒரு பெரிய படக் கடையாக வச்சு நடத்தலாம். ஏன்னு வருசம் முந்நாத்தி அறுபது நாளும் அவங்க எந்த மந்திரி படத்துக்காவது 'பிரேம்' போட்டுத் திறப்பு விழா நடத்திக்கிட்டுத்தான் இருக்காங்க. சொந்தப் படக் கடை அதுக்குத் தோதாக இருக்கும்!''

''அண்ணனே ஒரு சந்தேகம் கேட்கணும்! அது என்ன பொழில்வளவனுருன்னுகூட ஒரு பேரா இருக்க முடியும்? அவரு சொந்தப் பேரு என்னண்ணே?''

''சோலைராஜன்னு பேரு. அதைப் பொழில் வளவன்னு தமிழாக்கி வச்சுக்கிட்டிருக்காரு. பண்புச் செழியனுடை பேரு இராஜகோபால்ங்கிறது. அவரும்



'கெஸட் நோட்டிஃபிகேஷனுடை' பேரை மாத்திக்கிட்டாரு...''

''ஏன் இப்பிடி யெல்லாம் மாத்திக்கிருங்க அண்ணே? இதுலே என்ன ஒரு 'மேனியா'வோ தெரியலியே...?''

''இந்த மாதிரி 'மேனியா'வுக்கு எல்லாம் இங்கே ஒரு சரித்திரமே இருக்கு பாண்டியன்! நம்மிடையே பல இயக்கங்கள் உருவாயின. அதில் ஒன்றுதான் காரணமில்லாத பிற மொழி வெறுப்பு. தாய்மொழிமேல் பற்றோ ஞானமோ சிறிதும் இல்லாதவர்கள் கூட இந்தப் பிற மொழி வெறுப்பை வளர்த்துக் கொண்டாட முற்பட்ட காலம் ஒன்று இருந்தது. அதே காலத்தில் சமூகத்தில் உயர் வகுப்பார் என்று கருதப்பட்ட சிலர் தாய்மொழியை ஓரளவுகூட லட்சியம் செய்யாதிருக்கவே இந்தக் குறுகிய உணர்வு வளரவும் முடிந்தது. அந்தக் காலத்தின் பிரதிநிதிகள்தான் பொழில் வளவனும், பண்புச் செழியனும். இவர்களுக்கு உண்மையான மொழிப் பற்றும் இல்லை. தமிழ் மட்டுமே தெரிந்தவர்களிடம் ஆங்கிலத்தில் பேசி மிரட்டுவதும், ஆங்கிலம் மட்டுமே தெரிந்தவர்களிடம் கடுந் தமிழில் பேசி மிரட்டுவதுமாக இவர்களிடம் ஒரு தந்திரம் நிரந்தரமாக உண்டு. அதனால் தமிழறியாதவர்களும் இவர்களைக் கண்டு பயந்து ஒதுங்குவார்கள். ஆங்கிலம் அறியாதவர்களும் மிரண்டு ஒதுங்கிவிடுவார்கள்.'' தொடர்ந்து மணவாளன் பாண்டியனுக்கு வரலாற்று ரீதியாகத் தமிழ் நாட்டு அரசியல் இயக்கங்களைப் பற்றிய சில உண்மைகளை விளக்கினார். அந்த இயக்கங்களின் கடைசி வெற்றி 1967ல் அவர்களால் அறுவடை செய்யப்



## சத்திய வெள்ளம்

**தெய்வபக்தி இல்லாதவர்களையாவது நாத்திகர்கள் என்று ஒதுக்கிவிட முடியும். தேசபக்தி இல்லாதவர்களை மனிதர்களாகவே கருதக் கூடாது. அவர்களை மனித இனத்திலிருந்தே ஒதுக்கி வைக்க வேண்டும்.**

பட்டதையும் காரண காரியங்களோடு விவரித்தார் அவர். இன்னோர் உண்மையையும் அவர் கூறத் தயங்கவில்லை. ''நாடளாவிய பெருங் குறைகளையும் தேச விடுதலையையும் பற்றியே கவலைப்பட்ட மாபெரும் தேசபக்தர்கள் மொழி இலக்கியத் துறைகளைப் பற்றிய பிரதேச உணர்வுகளை மறந்ததால் அந்த மறதிக்கு ஒரு சிறிய இடைக்காலத் தோல்வியையே தண்டனையாகப் பெற நேர்ந்துவிட்டது! அந்தக் கொடுமையைத்தான் இப்போது நீயும் நானும் அனுபவிக்கிறோம். கிணற்றுத் தவளை மனப்பான்மை குறையக் குறையத்தான் இதிலிருந்து இனிமேல் நாம் விடுபட முடியும்.''

''கிணற்றுத் தவளை மனப்பான்மைகளே சில தத்துவங்களாகி, அந்தந்தத் தத்துவங்களே இங்கே சில கட்சிகளாகவும் வளர்ந்து விட்ட பின் அது எப்படி உடனே சாத்தியமாகும் அண்ணே?''

''சாத்தியமாகிறாற் போல் நாம் செய்ய முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது பாண்டியன்! அதற்குத்தான் நாம் இடைவிடாமல் போராடி வருகிறோம். இனி அடுத்த தலைமுறை தெளிவாக இருக்கும். நிஜம் வெள்ளமாகப் பெருக்கு எடுக்கும்போது எல்லாப் பொய்களையும் அது இருந்த இடம் தெரியாமல் அடித்துக் கொண்டு போய் அழித்துவிடும். பல ஆண்டுகளுக்கு முன் இங்கே பெருகிய முதற் சத்தியப் பெருக்கைக் காந்தியடிகள் ஊற்றுக் கண்ணாயிருந்து பெருகச் செய்தார். அதில் வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு ஆகிய குறுகிய மாநில உணர்வுகள் கரைந்து ஹரிஜன், மேலோன் என்ற பேதங்கள் தவிர்ந்து ஏழை, பணக்காரன் என்ற ஏற்றத் தாழ்வுகள் தகர்ந்து ஏக இந்தியாவும் விடுதலை பெற வேண்டும் என்ற வேகம் மட்டுமே நீரோட்டத்தின் இயக்கமாயிருந்தது. அதுபோல் மீண்டும் ஒரே திசையில் முனைந்து ஓடும் உண்மைப் பெருக்கு ஒன்றில்தான் இப்போதுள்ள பொய்களைக் கரைக்க முடியும்.''

மணவாளனின் தெளிவான கருத்து பாண்டியனை மெய்சிலிர்க்க வைத்தது. மறுநாள் அதிகாலையில் மல்லிகைப்பந்தலுக்குப் புறப்பட்டபோது மணவாளனே வந்து அவனை வழியனுப்பினார். பதினொன்றரை மணிக்கு அவன் மல்லிகைப்பந்தலை அடைந்தபோது பகலே இருட்டி மூட்டம் போட்டாற் போல் கவிந்திருந்தது. அவன் அந்த பஸ்ஸில் தான் வரமுடியும் என்று எதிர்பார்த்துக் கதிரேசனும் பத்திருபது 'மாணவ

# பல்லவா போக்குவரத்துக் கழகம்

## மலிவுக் கட்டணப் பயணச் சீட்டை வாங்கவும்

எல்லா நகர், நகர்ப்புற தடங்களிலும் செல்லும்

---

கிடைக்குமிடங்கள் :

அனைத்து பணிமனைகள், போக்குவரத்து இல்லம், மந்தைவெளி, தியாகராயநகர் பேருந்து நிலையங்கள், விரைவு பேருந்து நிலையம், அரசு தலைமைச் செயலகம், எழிலகம்.

மற்றைய விவரங்களுக்கு தொலை பேசி எண் : 29071-36, 21835

நிர்வாக இயக்குநர்









# அமிர்தாஞ்சனம்

## விரைவில் குணமளிக்கிறது!

அமிர்தாஞ்சனம் தலைவலி, ஜலதோஷம், சுளுக்கு, தசைவலி இவற்றிலிருந்து விரைவில் குணமளிக்கிறது. உபாதை ஏற்பட்டுள்ள இடத்தில் சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவி துரித நிவாரணம் பெறுங்கள். 75 வருடங்களாக குடும்பங்களில் பயன்பட்டு வரும் நம்பகமான நிவாரணி அமிர்தாஞ்சனம். எப்போதும் ஒரு பாட்டில் கைவசம் இருக்கட்டும். சிக்கனமான ஜாடிகளிலும், கைக்கு அடக்கமான டப்பாக்களிலும் கிடைக்கிறது.

10 மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற நிவாரணி

அமிர்தாஞ்சன் லிமிடெட் AM-5981

# பெண்களுக்குப் புதியதோர் வாய்ப்பு

புதியதொரு சேமிப்புத் திட்டத்தை பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திரா காந்தி ஏப்ரல் முதல் தேதி துவக்கி வைத்தார். மாதர் தலைமையிலான வட்டார சேமிப்புத் திட்டம் என்னும் இத்திட்டம் அளிக்கும் மிகச் சிறப்பான பகுதி நேர வேலை வாய்ப்பைப் பயன்படுத்தினால்

- உங்களது குடும்ப வருவாய் கூடுதலாகும்
- உங்கள் ஓய்வு நேரத்தைப் பயனுள்ள வகையில் பயன் படுத்தலாம்
- சமூகத் தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்ளலாம்
- நாட்டின் நலனுக்குப் பணியாற்றலாம்



---

**சேமிப்பு மாதர் தலைவராக**
**உங்கள் பணி**

நீங்கள் வசிக்கும் வட்டாரத்தில் உள்ள வீட்டுப் பெண்மணிகளுடன் தொடர்பு கொள்வது; முறையாக பணம் சேமிக்குமாறு அவர்களைத் தூண்டுவது; அவர்களுடைய சேமிப்புத் தொகைகளை ஒவ்வொரு மாதமும் திரட்டுவது; அந்தத் தொகைகளை இதற்கென ஒதுக்கிய தபால் நிலையத்தில் கொடுப்பது.

நீங்கள் திரட்டிய பணத்திற்கு 2¼% கமிஷன் உங்களுக்குக் கிடைக்கும்.

சேமிப்பு மாதர் தலைவர்கள் நாட்டின் எல்லா நகரங்களுக்கும் முக்கியமான ஊர்களுக்கும் தேவைப்படுகிறார்கள்.

விவரங்களுக்கு மனுச் செய்யுங்கள்:
**நேஷனல் சேவிங்ஸ் கமிஷனர்**
**தபால் பெட்டி என். 96**
**நாக்பூர்.**

NATIONAL SAVINGS ORGANIZATION

davp 72/19

நண்பர்களும் அவனை வரவேற்கப் பஸ் நிலையத்துக்கு வந்திருந்தனர். மல்லிகைப்பந்தல் மண்ணில் இறங்கியதும் இறங்காததுமாக ஒரு போராட்டப் பிரச்னையோடு பாண்டியனை எதிர் கொண்டார்கள் அவர்கள். தங்களோடு பாலேஸ்வரி என்ற யாழ்ப்பாணத்து மாணவியையும் அவர்கள் பஸ் நிலையத்துக்கு அழைத்து வந்திருந்தார்கள். பல்கலைக் கழகத்தில் படிக்கும் வெளிநாட்டு மாணவிகளில் அவள் குறிப்பிடத் தக்கவள் என்ற முறையில் அவளை இரண்டொரு முறை கண்ணுக்கினியாளுடன் பார்த்திருக்கிறான் பாண்டியன். அவள் சம்பந்தமாக ஏதோ பிரச்னை அங்கே காத்திருக்கிறது என்பது மட்டும் பாண்டியனுக்கு உடனே புரிந்தது.

கதிரேசன் பஸ் நிலையத்திலேயே அந்தப் பிரச்னையைச் சொல்லத் தொடங்கியதும், ''இங்கே பேச வேண்டாம். அண்ணாச்சி கடையிலே போய்ப் பேசுவோம்'' என்று பாண்டியன் அவர்களையும் உடன் அழைத்துக் கொண்டு அண்ணாச்சி கடைக்குப் போனான். அவன் போனபோது கடையில் அண்ணாச்சி இல்லை. எங்கோ வெளியே போயிருந்தார். கடையின் பின் அறையில் போய் அமர்ந்தார்கள் அவர்கள். கதிரேசனும், பிறரும், இடையிடையே அந்த யாழ்ப்பாணத்துப் பெண்ணும் சொல்லியதிலிருந்து பாண்டியனுக்கு என்ன நடந்திருக்க வேண்டும் என்று புரிந்தது. இரண்டு மூன்று நாட்களுக்கு முன் ஒரு மாலை வேளையில் மல்லிகைப்பந்தல் ஏரியின் கரையில் பூங்காவில் இருந்த பெஞ்சு ஒன்றில் அந்தப் பெண் பாலேஸ்வரி அமர்ந்திருந்தபோது மல்லை இராவணசாமியின் மூத்த மகனும் கோட்டச் செயலாளர் குருசாமியின் மூத்த மகனும் அந்தப் பக்கமாக வந்து அவளை வம்புக்கு இழுத்துக் கேலி செய்திருக்கிறார்கள். இருவருமே பல்கலைக்கழகத்தில் படிப்பவர்கள்தான். என்றாலும் திமிர் பிடித்தவர்கள். அவர்கள் பாலேஸ்வரியிடம் முறை கேடாக நடந்து கொள்ள முயலவே. அவள் கால் செருப்பைக் கழற்றி அடிக்க ஓங்கிக் கூப்பாடு போட்டுக் கூட்டம் சேர்த்து விட்டாள். மல்லை இராவணசாமியின் மகனும், குருசாமியின் மகனும் கூட்டத்தைக் கண்டதும் பயந்து ஓடிவிட்டார்கள். ஆனால் வீட்டில் போய் இருவரும் தங்கள் தங்கள் தந்தையிடம், பார்க்கில் தனியாக அமர்ந்திருந்த அவள் தங்களைத் தவறான வழியில் அழைத்ததாக மாற்றிச் சொல்லி அதன் விளைவாக மல்லை இராவணசாமியும், கோட்டம் குருசாமியும் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடி இன்ஸ்பெக்டரிடம் வத்தி வைத்து விட்டார்கள். போலீஸ் இன்ஸ்பெக்டரும், உடனே இந்தப் பெண்ணைக் கூப்பிட்டு அவராகப் பொய்க் குற்றம் சாட்டி எழுதிய எஃப். ஐ. ஆரில் இவளைக் கையெழுத்துப் போடும்படி வற்புறுத்தியிருக்கிறார். இவள் பிடிவாதமாக மறுத்திருக்கிறாள். இவளைப் போலீஸ் நிலையத்துக்கு அழைத்துப் போனதைப் பார்த்த கெமிஸ்ட்ரி புரொபஸர் ஸ்ரீராமன் பின் தொடர்ந்து ஸ்டேஷனுக்குப் போய் என்னவென்று விசாரித்திருக்கிறார். விபசாரக் குற்ற வழக்கு என்றவுடன் ஸ்ரீராமன் கடுங்கோபங் கொண்டு, ''நோ, நோ, யாரோ உங்களுக்குத் தப்பாகச் சொல்லியிருக்கிறார்கள். இவள் என் மாணவி. இவளை நான் நன்றாக அறிவேன். இது அபாண்டம். அடுக்காது'' என்று கூறியிருக்கிறார். ஸ்ரீராமன் நரைத்த தலையும், முடிந்த குடுமியும் பழுப்பேறிய வேஷ்டியுமாக ஒரு பழைய காலத்துத் தோற்றம் உடையவராக இருக்கவே, போலீஸ் இன்ஸ்பெக்டர், ''பஞ்சாங்கக்காரப் பயலே! வெளியிலே போடா! நீ யாரடா இதை வந்து இங்கே சொல்றத்துக்கு'' என்று திடீரென்று அவர் மேல் பாய்ந்து அவரது கழுத்தின் பின்புறம் பிடரியில் கைகொடுத்து அழுத்தி நெட்டித் தள்ளியிருக்கிறார். ''இன்ஸ்பெக்டர் தள்ளியதும் தள்ளாடித் தலைகுப்புறவிழுந்த ஸ்ரீராமன் முன் நெற்றியில் காயத்தோடு அவமானப்பட்டு வீட்டுக்குத் திரும்பி அப்புறம் அது ஊர் முழுதும் பரவி நானும் முந்நூறு நானூறு மாணவர்களும் ஸ்டேஷனுக்கு ஊர்வலமாகப் போன பிறகுதான் இந்தச் சகோதரியை மீட்க முடிஞ்சுது. ஒரு மாணவியின்மேல் அபாண்டமாக விபசாரக் குற்றச் சாட்டு வருகிறது. அதைக் கேட்கப்போன ஒரு புரொபஸரைப் போலீஸ் இன்ஸ்பெக்டர் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுகிறார். இது நாடா அல்லது காடான்னுதான் புரியலே. மல்லை இராவணசாமிக்கும், கோட்டச்செயலாளர் குருசாமிக்கும் மட்டும்தானா போலீஸ்? நமக்கெல்லாம் இல்லியா

உங்கள் குழந்தைகளின் மலர்ச்சிக்கு இன்று கோதுமை வாங்கினீர்களா?

அந்தப் போலீஸ்? இவ்வளவு பெரிய அக்கிரமம் நடந்தும் வி.ஸி. இன்னும் இதைக் கண்டித்து ஒரு வார்த்தை பேசலே. பேருக்குக் கூட வருத்தப் படலே. போலீஸ், வி. ஸி., ஆர். டி. ஓ. எல்லாருமாகச் சேர்ந்து பேப்பர்லே இந்தச் செய்தி வரவிடாமல் பண்ணிப் பிட்டாங்க பாண்டியன்! நான் உனக்கு இதைப்பற்றி ஒரு தந்தி கூடக் கொடுக்க லாம்னு நினைச்சேன். ரொம்பக் கொடுமை இது. இதை இப்பிடியே விட்டு விடக் கூடாது'' என்று குமுறி ஞன் கதிரேசன்.

''புரொபஸர் ஸ்ரீராமன் இப்ப வீட்டிலே இருக்காரா, ஆஸ்பத்திரி யிலே இருக்காரா? அவரை முதல்லே போய்ப் பார்ப்போம். அப்புறம் மற்ற வற்றை யோசிக்கலாம்'' என்றான் பாண்டியன். கெமிஸ்ட்ரி புரொபஸர் வீட்டில்தான் இருக்கிறார் என்று கதி ரேசன் கூறியதும் அவர்கள் அவரைப் பார்க்கப் புறப்பட்டார்கள். பேராசிரி யர் ஸ்ரீராமன் பழைய காலத்து மனிதர். ஆனால் நல்ல படிப்பாளி, மாணவர்கள் மேல் கருணையும் அன்பும் உடையவர். அவருக்கு இப்படி ஒரு கொடிய அவ மானம் இழைக்கப்பட்டு விட்டது என் பதை நினைத்துப் பார்க்கவும் வருத்த மாக இருந்தது பாண்டியனுக்கு.

ஸ்ரீராமன் அவர்களைப் பார்த்ததும் அழாத குறையாக எல்லாவற்றையும் விவரித்தார். ''நான் பண்ணின பாவம் அப்பா! ஒரு வெளிநாட்டு மாணவி — நம்ம தேசத்தை நம்பிப் படிக்க வந்த வளைப் பத்தி இப்படி ஒரு அபாண்ட மான்னு கேட்கப் போனேன். இன்ஸ் பெக்டர் ஆளும் கட்சி எம். எல். ஏ. போட்ட தூபத்திலே அவனுக்குக் கட்டுப்பட்டுக் கிடக்கிறார். அந்தச் சமயம் பார்த்து நான் நியாயம் கேட்கப் போய்ச் சேர்ந்தேன். அதுக்குத் தான் இந்தத் தண்டனை. ரெண்டு எம். எல். ஏ.யும், பவர்லே இருக்கிற மினிஸ்டிரிக்கு வேண்டியவனும் எது சொன்னாலும் அதைத்தான் கேக்கறது துன்னு வந்துட்டா அப்புறம் போலீஸ் எதுக்கு? நியாயம், சட்டம்லாம் எதுக்கு?'' என்று கொதித்துக் கேட் டார் அவர். பாண்டியனுக்கு உள்ளம் குமுறியது. பாலேஸ்வரி மீண்டும் புரொபஸருக்கு முன் கண் கலங்கி அழுதே விட்டாள். உடனடியாக ஓர் ஊர்வலத்தை நடத்தி அந்த வெளி நாட்டு மாணவியையும், புரொபஸரை யும் ஆதரித்ததற்காகக் கதிரேசனைப் பாராட்டினான் பாண்டியன். உடனே பத்திரிகைகளுக்குச் செய்திகள் அனுப்ப ஏற்பாடு செய்தான்.

பிற்பகலில் அவனும் அந்த மாணவி யும் வேறு சில மாணவர்களும் துணை வேந்தரை அவர் வீட்டில் போய்ப் பார்த்தார்கள். துணைவேந்தர் அழுத்த லாக இருந்தார். பாண்டியன் அந்தப் பேச்சை ஆரம்பித்ததுமே, ''பாண்டி யன், லெட் அஸ் ஃபர்கெட் வாட் ஹாப்பண்ட் இன் தி பாஸ்ட்...'' என்று மெல்ல நழுவ முயன்றார் துணைவேந்தர்.

''புரொபஸர் ஸ்ரீராமனைத் தாக்கி யதை நீங்கள் ஏன் இன்னும் கண்டித்து அறிக்கை விடவில்லை?''

''அவரை யாரும் தாக்கியதாக எனக் குத் தகவல் இல்லையே?...''

''ஓகோ! தாக்கியவர்களோ தாக்கப் பட்டவர்களோ உங்களிடம் வந்து சொன்னாலொழிய நீங்கள் அதற்காகக் கவலைப்படவோ, வருந்தவோ மாட் டீர்கள்; இல்லையா?''

''ஆல்ரைட்! யூ ஸீம் டு பீ வெரி ஆங்ரி. எனிதிங் மோர் டு ஸே?...''

''நத்திங் சார்! சொல்ல ஒன்றுமில்லை. செய்வதற்குத்தான் நிறைய இருக்கி றது'' என்று பதில் சொல்லிவிட்டு விருட் டென்று எழுந்தான் பாண்டியன்.

''ஆர் யூ நாட் அஷேம்ட்...'' என்று கோபமாகத் துணைவேந்தரை நோக்கி ஏதோ ஆரம்பித்த கதிரேசனின் வாயைப் பொத்தி அவனையும் வெளியே இழுத்துக் கொண்டு வந்தான் பாண்டியன். மாலை யில் மாணவர்களின் அவசர ஆலோ சனைக் கூட்டம் ஒன்று மோகன்தாஸ் தலைமையில் அண்ணாச்சியின் கடையின் பின்புறம் நடந்தது. அதைத் தொடர்ந்து இரவில் அந்த நகரின் முக் கிய அரசியல் பிரமுகர்கள் சிலரை மாண வர்கள் சந்தித்தார்கள்; கலந்து பேசி னார்கள். யாழ்ப்பாணத்து மாணவியி டம் மல்லை இராவணசாமியின் மகனும், கோட்டம் குருசாமியின் மகனும் தவ றாக நடந்து கொண்டதையும் புரொப ஸர் ஸ்ரீராமன் போலீஸால் அவமானப் படுத்தப்பட்டதையும் கண்டித்து ஓர் ஆர்ப்பாட்டம் நடத்த ஏற்பாடு செய்யப் பட்டது. வெளியூர் மாணவர்களோடும், மணவாளனோடும் ஃபோன் மூலம் தொடர்பு கொண்டு பேசினான் பாண் டியன். எதிர்ப்புக் கனல் எல்லா இடங் களிலும் பரவியது. பட்டமளிப்பு விழா வின்போது நடத்த வேண்டிய பெரிய போராட்டத்துக்கு முன் சக மாணவி ஒருத்திக்கும், வயது மூத்த பேராசிரியர் ஒருவருக்கும் இழைக்கப்பட்ட தீமைகளை எதிர்த்து முதலில் இந்தப் போராட் டத்தை அவர்கள் மேற்கொள்ள வேண்டியிருந்தது. (தொடரும்)

# கே. ஆர். விஜயாவின் நான்கு எழில்மிகு ரகசியங்கள்:



நம் நாட்டிற்கு விஜயம் செய்த ஒரு ஒய்யாரக் கப்பலில் நடந்த விருந்தின்போது கே. ஆர். விஜயா சில சொந்த உண்மைகளைக் கூற இசைந்தார்.

இந்தியாவைத் தவிர உலகில் மற்ற எந்த இடத்தில் நீங்கள் வாசம் செய்ய விரும்புகிறீர்கள்?

'உண்மையில் எனக்கே அது தெரியாது. ஏன், ஸ்விட்ஸர்லாந்து என்று வைத்துக் கொள்வோமே? நான் அதைப் பற்றி எண்ணியதே இல்லை. நம் தென்னிந்தியாவே அழகு மிகுந்த இடம் தானே!'

உங்கள் பிறந்த நாளன்று நீங்கள் மிகவும் விரும்பும் பரிசு?

'தென்னிந்தியப் பட்டுப்புடவைதான். அதன் பளபளப்பை நான் மிகவும் விரும்புகிறேன்'

நீங்கள் விரும்பும் ஆபரணங்கள்?

'வைரங்கள் பதித்த ஜெய்ப்பூர் மீனா வேலைப்பாடுகள்'.

விஜயா, உங்கள் எழிலின் ரகசியம்?

'லக்ஸ்தான். இது உலகறிந்த உண்மையாயிற்றே!'

## 'என் மேனி பொலிவுடன் இருப்பதற்குக் காரணம் நான் உபயோகிக்கும் லக்ஸ்தான். அது சுத்தமானது, மிருதுவானது'




HDL 4019

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் ஒரு தரமான தயாரிப்பு

# வெட்டுக் காயங்கள்! சுட்ட புண்கள்!

# விரைவில் இட்டுப் பாருங்கள் பர்னல்

## குளுமையுடன் இதமளிக்கும் நிவாரணி






**பர்னல் பட்டவுடனே சட்டென ஆற்றும்.**
பட்டதுமே கிருமிகளைக் கொல்லும் நச்சு முறிப்பு சக்தி வாய்ப்புறப்பரப்பில் கொண்டுள்ளதால், பர்னல் சட்டென்று ஆற்றுகிறது. மற்ற மருந்துகளிலே, நச்சு முறிப்பு சக்தி உட்கருவாகப் புதைந்திருக்கும். ஆதலால் ஆற நேரமாகும். நோய் தொற்ற வாய்ப்புண்டு.



**ஆற்றும் போதே இதம்.**
பர்னல் காயங்களை ஆற்றும் போதே குளுமையுடன் இதமளிக்கிறது. இது சில நச்சு முறிப்பு மருந்துகளைப் போன்று கடுக்கவோ எரிக்காது. அழுக்கு துகள்களையும் அகற்றிவிடும்.



**'கட்டு' தண்டனை இன்றியே சட்டெனக் காயமாற்றும்.**
கட்டிய கட்டுடன் ஒட்டிக் கொள்ளாது பர்னல். காயத்தைப் பாதிக்காமல், அசிவுக்கு இதம் தருவதை தேர்வுபடுத்தாமல், வலியின்றிக் கட்டுகளை அவிழ்க்க முடியும்.

வீடு என்றால் விபத்துக்கள் நேரத்தான் செய்யும். அடிக்கடி களிக்கும் குழந்தைக்கு அடிக்கடி அடிபடுவது சகஜம். சமையலறையிலே எந்த நேரத்திலும் கொதி எண்ணெய் தெறிக்கலாம்; காய்கறி நறுக்கும்போது விரலிலே பட்டுவிடலாம். எனவே எப்போதும் கைவசம் இருக்கட்டும் பர்னல்! குளுமையுடன் இதமளிக்கும் பர்னல், தீப்புண், வெட்டு, சிராய்ப்பு, கட்டி மற்றும் காயங்களை ஆற்றும் பலபயன் நிவாரணி. இட்டவுடன் இதமளித்து ஆற்றுவது பர்னல்

**பர்னல் 40 ஆண்டுகளுக்கும் மேலாக கணக்கற்ற இல்லங்களில் காயமாற்றிவரும் நம்பகமான நிவாரணி**






ASP/B/B-14 TM

# மரகதமணி சிந்தும் பல வண்ணக் கதிர்கள்

## ஏ. கே. வேங்கடேசன்

பத்திரிகை நிருபர் என்ற முறையிலே ராஜாஜியிடம் அடிக்கடியும் நீண்ட காலத்துக்கும் தொடர்பு கொண்டிருந்த திரு வேங்கடேசனின் அனுபவங்கள் வானவில்லின் வண்ணங்களையும் விஞ்சுவனவாயுள்ளன.

நான் முதன் முதலாக ராஜாஜியைச் சந்தித்தது, உப்புச் சத்தியாக்கிரக இயக்கத்தின் போதாகும். 'ஹிந்து'ப் பத்திரிகையின் நிருபர் என்கிற முறையில், மதுரையில் நடந்த அரசியல் மகாநாட்டைப் பற்றி எழுதுவதற்காக அனுப்பப்பட்டிருந்தேன். இம் மகாநாட்டில் ராஜாஜி தமிழில் பேசினார். விஷயம் சற்றே சர்ச்சைக்கிடமானது. வழக்கம்போல் அவரது பேச்சில் சட்டத் துறைக்கே உரிய சூட்சுமமான புதுப் புது வாதங்கள் நிரம்பியிருந்தன. மகாநாட்டு நடப்புகள் பற்றி நான் எடுக்க வேண்டிய குறிப்புக்களை முடித்துக் கொண்டு, அவற்றைப் பத்திரிகைக்கு அனுப்புவதற்காகத் தந்தி அலுவலகத்துக்குப் புறப்பட்டேன். அப்போது ராஜாஜியைச் சந்தித்தேன். நான் தயாரித்திருந்த அறிக்கையைத் தாம் பார்க்கலாமா என்று ராஜாஜி வினவினார். ஒரு கணம் தயங்கிவிட்டு, நான் எழுதியிருந்ததை அவரிடம் தந்தேன். அவர் அதன் மீது வேகமாகக் கண்ணை ஓட்டினார். அவரது பேச்சு தொடங்கிய இடத்திலிருந்து ஆழ்ந்து படித்துப் பார்த்தார். அனைத்தையும் நான் சரியாகப் புரிந்துகொண்டிருப்பதாகவும், ஒரே ஓர் இடத்தில் மட்டும் அவர் சொன்னது என்னுடைய ஆங்கில மொழிபெயர்ப்பில் பூரணமாக வெளியாகவில்லை என்றும் கூறினார். அதன் சரியான மொழிபெயர்ப்பு எப்படி இருக்க வேண்டும் என்பதையும் அவரே கூறினார். ஆனால் அதை நான் ஏற்றுக் கொள்கிறேனா, இல்லையா என்பதை எனக்கே விட்டு விட்டார்.

தந்தி அலுவலகத்துக்குப் போகும்போது நான் யோசித்துப் பார்த்தேன். ராஜாஜி தெரிவித்த மாற்றம் எனது மொழிபெயர்ப்பை அவர் கூறியதற்கு அண்மையில் கொணர்ந்ததோடு என் குறிப்பையே சிறக்கச் செய்தது என்று திட்டமாகக் கண்டு கொண்டேன். அவ்விதமே நான் எழுதியதில் மாற்றம் செய்து தபாலில் சேர்த்தேன். ராஜாஜி எத்தகைய கூர்ந்த கவனத்துடன், வெகு பொருத்தமாக வார்த்தைகளை உபயோகிக்கிறார் என்பதை இதிலிருந்து நன்கு உணர்ந்தேன். வெளியிடப்படும் செய்திகள், குறிப்பாக மொழிபெயர்ப்புக்கள் எத்துணை சரியாக இருக்க வேண்டும் என்று அவர் எதிர்பார்க்கிறார் என்பதும் புலனாயிற்று.

முப்பத்தைந்து ஆண்டுகள் பத்திரிகை நிருபராகப் பணி செய்ததில் ராஜாஜியின் பொது நடவடிக்கைகள், பேச்சுக்கள், அறிக்கைகள் ஆகியவற்றை விசேஷமாகக் கையாள்கிற பேறு எனக்குக் கிடைத்தது. அவர் பரிசயம் கொண்டிருந்த துறைகள் பலப்பல.

கட்டுரை ஆசிரியர்



அவற்றைக் குறித்துத் தகவல் எடுப்பது உத்தியோக ரீதியில் எனக்கு ஒரு மதிக்கவொண்ணாத வாய்ப்பாகவும், ஒழுங்கினைக் கற்பிப்பதாகவும் இருந்தது. அதோடு கூட ராஜாஜியின் சொல்லும் செயலும் எனக்குச் சொந்த முறையில் உண்மையான கல்வியின் ஊற்றாகவும் இருந்தது. பொதுப் பணியில் அவரை ஊக்குவிக்கும் மனிதாபிமான சக்தியை உன்னிப்புடன் கவனித்து ரசித்தேன். ஏழையரிடமும், துன்புறுவோரிடமும் அவருக்குள்ள பெருத்த அநுதாபத்தைக் கண்டேன். மது விலக்கு, ஆலயப் பிரவேசம், ஹரிஜன முன்னேற்றம் முதலியவற்றில் அவருக்கிருந்த ஆவேச உற்சாகத்தைக் கண்டேன். தேசத்துக்காகவும், மக்களுக்காகவும் பெரிய சாதனைகளைச் செய்ய வேண்டும் என்று தமக்குப் ''பேரவா'' இருப்பதாக அக்காலங்களில் ராஜாஜியே அடிக்கடி கூறுவார்.

சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியாக ராஜாஜி பதவி ஏற்றபோது தமக்கு 'விநோதமான உணர்ச்சி' ஏற்பட்டதாகக் கூறினார். ''ஒருபுறம் நம் மக்களிடம் எழுப்பப்பட்டுள்ள பெருத்த நம்பிக்கைகளையும், மறுபுறம் என்னுடைய குறைபாடுகளையும் எண்ணிப் பார்க்கும்போது நடுங்குகிறேன்'' என்றார்! தமது ''பேரவா''க்களில் சிலவற்றை வாஸ்தவமாகவே செயலாக்குவதில் வெற்றி கண்டபோது அவர் பெற்ற மகிழ்ச்சி மட்டற்றது. அவரது மந்திரி சபையின் இப்படிப்பட்ட மகா சாதனைகளில் ஒன்று மதுவிலக்கை அமல் செய்ததாகும். இதைச் சகல மக்களும் ஏகோபித்து வரவேற்றனர்.

1938ல் கடப்பை மாவட்டத்தில் மதுவிலக்கு அமுலான தினம். ராஜாஜி அங்கு சுற்றுப் பிரயாணம் செய்தார். ராயச்சோட்டியில் சில கிராமவாசிகள் அவரது காரை நிறுத்தித் தங்களது நன்றியைத் தெரிவிக்கு முகமாக, வரவேற்புப் பாடல் ஒன்று பாடினர். டமாரமும் ஜாலராவும் தட்டிக் கொண்டு ஆடவும் செய்தனர். போகப் போக ஆட்டமும் பாட்டமும் சூடு பிடித்தன. அவர்களது களிப்பு மற்றவர்களுக்கும் தொத்திக் கொள்கிற உச்சகட்டம் வந்தது. இதுவரையில் அவர்களது ஆடலை அமைதியாகப் பார்த்து வந்த ராஜாஜியே இப்போது முன்வந்து அவர்களில் ஒருவராகச் சேர்ந்து கொண்டு விட்டார்! கூடியிருந்தோர் அனைவரும் கோஷம் எழுப்பி உற்சாகமூட்ட, அந்தக் கிராமவாசிகள் இரட்டிப்புப் பலத்துடன் தங்களது ஆடல் பாடலைத் தொடர்ந்தனர். இப்படியாகத் தானே, சாலை ஓரத்தில் கிராம

வாசிகளின் ஆனந்தமும் ராஜாஜியின் ரசிப்புமாகச் சேர்ந்து ஓர் அழகிய சிறு நாடகத்தையே அரங்கேற்றக் கண்டு விட்டோம்.



ராஜாஜியின் வண்டி அடுத்தபடியாக நின்ற இடத்தில் இதற்கு முற்றிலும் மாறான ஒரு கதை நடந்தது. அங்கே ஒரு வீட்டிலிருந்து - அல்லது முன்பு வீடாக இருந்து இப்போது எஞ்சி நின்றதிலிருந்து — ஒரு கிழவி விந்திக் கொண்டே வெளி வந்தாள். அவள் ராஜாஜியிடம் வருவதற்கு முயன்றாள். ஆனால் கூட்டத்தில் முண்டியடித்துக் கொண்டு வர அவளுக்குத் திராணி இல்லை. இதைக் கண்டு கொண்ட ராஜாஜி, தாமே அவள் இருந்த இடத்துக்குச் சென்றார். அவள் தம்மிடம் தெரிவிக்க விரும்புவது என்ன என்று வினவினார். அவள் தனது சோகக் கதையைக் கூறினாள். அவளுடைய கணவனும், வயது வந்த இரு பிள்ளைகளும் குடித்தே நாசமாகினார்கள் என்றாள். அவர்களுடைய வீடும், ஒருசில குழி நிலமும் கடனில் மூழ்கிப் போகிற நிலையாம்! குடும்பம் பட்டினியால் வயிறு காய்கிறது என்றாள். ''அவங்களைப் பேய் பிடிச்சுக்கிட்டிருக்கு. பெண் பிள்ளைகள் நிராதரவாகத் தவிக்கிறோம்'' என்று புலம்பினாள். கண்ணீரில் நனைந்தாள்.

''பேயை விரட்டியாச்சு, அம்மா!'' என்று ராஜாஜி அவளை ஆசுவாசப் படுத்தினார். அந்த மாவட்டத்தில் அன்றிலிருந்து மதுவிலக்கு அமுலாவதைக் கூறினார். ''(பெண்களான) நீங்கள் ஜாக்கிரதையாக இருந்தால், இன்று விரட்டப்பட்ட பேய் திரும்பி வராது. அப்போது உங்களிடம் பணம் சேரும். வீடு வாசல் செழிப்படையும்'' என்றார்.

அன்று சுற்றுப்பயணம் முடிகையில் ராஜாஜியின் உள்ளம் களிப்பில் கிளுகிளுத்திருந்தாலும், உடலில் சக்தியே இல்லை. ''பாதிப் பிராணன் போய்விட்டது'' என்றார். ஆயினும் ''மக்களின் மகிழ்ச்சி மயமான மாற்றத்தைப் பார்த்ததற்கு எந்தச் சிரமமும் படலாம்'' என்றார். ''உயிரோடு இருப்பதற்கு இதைப் பார்த்ததே போதும்'' என்றார்.

ஹரிஜனங்களுக்கு ஆலயங்களைத் திறந்து விட்டது, ராஜாஜியின் மந்திரி சபை ஆற்றிய மற்றொரு சாதனை. இந்தச் சீர்திருத்தத்துக்காக ராஜாஜி நீண்ட காலமாகப் பாடுபட்டிருக்கிறார். 1939ம் ஆண்டு ஜூலை எட்டாந் தேதியன்று, தமிழ் நாடு ஹரிஜன சேவக் சங்கத் தலைவர் ஸ்ரீ ஏ. வைத்தியநாத அய்யரும், காரியதரிசி ஸ்ரீ எல். என். கோபால சுவாமியும் ஒருசில ஹரிஜனங்களுடன் மதுரை ஸ்ரீ மீனாக்ஷியம்மன் ஆலயத்தில் பிரவேசித்து வழிபட்டனர். எந்த அசம்பாவிதமும் நிகழவில்லை. அப்போது தமக்கு ''சந்தோஷ ஜன்னி'' கண்டிருப்பதாக ராஜாஜியே கூறினார்.



'' ஆனந்த வெறி ''யிலும் கூட ராஜாஜியின் ராஜரீக விவேகம் நிலைமாறவில்லை. ஆலயப் பிரவேச விஷயமாகச் சட்டரீதியில் சிக்கல்கள் உண்டாக்கப்படலாம் என்பதை உணர்ந்து, பிரமிக்கத்தக்க திறமையுடனும், விரைவுடனும் கவர்னரைக் கொண்டு ஓர் அவசரச் சட்டம் பிறப்பித்துவிட்டார்!

* * *

இரண்டாவது உலக யுத்தத்தின்போது காங்கிரஸின் கோரிக்கைக்குச் சற்றும் செவி சாய்ப்பதில்லை என்று பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் உறுதியாக இருந்தது. அச்சமயத்தில் முஸ்லிம் லீகுடன் காங்கிரஸ் சமாதானம் செய்து கொள்ள முயற்சி எடுக்க வேண்டும் என்றும், இவ்வாறு இரண்டு கட்சிகளுமாகக் கூடிப் பிரிட்டிஷாரை நம் வசம் ஆட்சியை ஒப்புவிக்குமாறு வற்புறுத்த வேண்டும் என்றும் ராஜாஜி வலியுறுத்தினார். ஆனால் இதற்குக் காங்கிரஸின் மேலிடம் இணங்கவில்லை. அப்படியிருந்தும் காங்கிரஸ் கட்சியானது மந்திரி சபைகள் ராஜிநாமாச் செய்ய வேண்டும் என்று முடிவு செய்தபோது, கட்டுப்பாடு மிகுந்த ஒரு ராணுவ வீரனைப் போல் ராஜாஜி அம்முடிவுக்கு ஏற்பப் பதவியைத் துறந்தார். தொடர்ந்து நடந்த தனிநபர் சத்தியாக்கிரகத்தைச் சென்னை மாகாணத்தில் அவரே முன்நின்று நிர்வகித்தார். இந்த இயக்கத்தில் பங்கு கொண்டதற்காக அவர் கைது செய்யப்பட்டு ஓராண்டு சிறைத் தண்டனையும் பெற்றார்.

அவர் கைதானபோதும், அவரது விசாரணையின்போதும் கண்ட காட்சிகள் இன்றும் என் நினைவில் பசுமையாக உள்ளன. சிறைவாசத்துக்கான தமது பொருட்களை அவர் கட்டி வைத்தார். மேயருக்கும், மற்றும் முக்கியஸ்தர்களுக்கும் கடிதங்கள் எழுதினார். அந்நாள் சட்டப்படி யுத்த முயற்சிக்கு விரோதமானவை என்பதால் அவரைக் குற்றவாளியாக்கிய கருத்துக்களை இக் கடிதங்களில் வெளிப்படுத்தியிருந்தார்.

தமது அறையிலிருந்து அவர் முன் கூடத்துக்கு வந்தபோது அவரது சின்னஞ் சிறு பேத்தி அவரிடம் ஓடிவந்தாள். தாத்தாவைப் பிரியப்போகிறோம் என்கிற உள்ளுணர்ச்சி அந்தக் குழந்தைக்கு இருந்தது போலிருந்தது! ராஜாஜி ஒரு விநாடி நின்றார். பேத்தியின் கன்னத்தில் மிருதுவாகத் தட்டினார். அச் சிறிய ஜீவனுக்கு ஒரே ஆனந்தமாயிற்று. ஆயினும் யூனிஃபாரம் உடுத்திய மனிதர்கள் சூழ்ந்து நிற்பதைக் கண்டு, கூச்ச அச்சத்துடன் அவள் நகர்ந்தாள்—தாத்தாவின் மீதே பதிந்த கண்களோடு.

வீட்டு வாசலில் ஒரு பெரிய கூட்டம் குழுமியிருந்தது. ராஜாஜி அதைக் கவனித்தார். அவர் வீட்டை விட்டுத் தெருவில் இறங்கியவுடன் கூட்டத்தினர் பெருத்த ஜயகோஷம் எழுப்பினர். அவர்களை வெறுமே இருக்குமாறு ராஜாஜி கையமர்த்தியபோதிலும் அவர்கள் 'ஜே' போட்டபடியே இருந்தனர். கார் தெருத் திருப்பத்தில் வளைந்து கண் மறைகிற வரை வாழ்த்தொலி நிற்கவில்லை.

1941 அக்டோபரில் ராஜாஜி சிறையிலிருந்து வெளி வந்தார். அப்போது மற்ற தலைவர்களில் பெரும்பாலோர் விடுதலை ஆக

இன்றைய முன்னணி பிரபல

# பழனி டாக்டர் எஸ். காளிமுத்து

R. M. P. (Ind.) V. V. C., A. M. I. H.

**அவர்களின் விஜயம்**



**சந்திக்கும் விலாசங்கள்**

10-ந் தேதி திருப்பத்தூர் (N. A.): சங்கர் கபே பகல் 1 மணி முதல் 2-30 மணி வரை.

10-ந் தேதி ஆம்பூர்: N. A. B. லாட்ஜ், மாலை 3-30 மணி முதல் 5 மணி வரை.

11ந் தேதி வேலூர் (N. A.): அஜீஸ் மேன்ஷன்ஸ் காலை 8 மணி முதல் 11 மணி வரை.

11-ந் தேதி குடியாத்தம் அலங்கார் லாட்ஜ் பகல் 1 மணி முதல் 3 மணி வரை.

13-ந் தேதி பெங்களூர் ஸிடி: நியூ எவரெஸ்ட் ஹோட்டல், காலை 8 மணி முதல் மாலை 5 மணி வரை.

13-ந் தேதி கிருஷ்ணகிரி: ஸ்ரீ ராம் லாட்ஜ், காலை 8 மணி முதல் 10 மணி வரை.

13-ந் தேதி தர்மபுரி: சீனிவாசா லாட்ஜ் காலை 11 மணி முதல் 12 மணி வரை.

13-ந் தேதி சேலம்: லக்ஷ்மி ராஜபவன் லாட்ஜில், பகல் 2 முதல் 5 மணி வரை.

15-ந் தேதி ஈரோடு: நவபவனம் லாட்ஜ் காலை 8 மணி முதல் 12 மணி வரை.

15-ந் தேதி திருப்பூர்: ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜில் பகல் 2 மணி முதல் 4 மணி வரை.

16-ந் தேதி பொள்ளாச்சி: ஹோட்டல் தோஞ்சலி, மாலை 5-30 மணி முதல் 7-30 மணி வரை.

16-ந் தேதி கோவை: விஜயா லாட்ஜ், காலை 8 மணி முதல் மாலை 3 மணி வரை.

17-ந் தேதி சென்னை: ஹோட்டல் ஸ்ரீலேகா மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

18-ந் தேதி சென்னை: ஹோட்டல் ஸ்ரீலேகா காலை 9 மணி முதல் பகல் 12 மணி வரை.

19-ந் தேதி பம்பாய்: சாரதா பவன் (மாதுங்கா), காலை 8 மணி முதல் மாலை 3 மணி வரை.

## பழனி சித்தர் வைத்தியசாலை

போன்: 316] பழனி [தந்தி: சித்தர்

# லிப்கோ வெளியீடுகள்

கீர்த்தனாசார்ய ஸ்ரீ உ. வே. C. R. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் அவர்களின்

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

(தமிழ் வசனம்)

மலிவுப் பதிப்பு:

| | | |
|---|---|---|
| 1. | பால காண்டம் | ரூ. 8-00 |
| 2. | அயோத்யா காண்டம் | ரூ. 8-00 |
| 3. | ஆரண்ய காண்டம் | ரூ. 5-00 |
| 4. | கிஷ்கிந்தா காண்டம் | ரூ. 5-00 |
| 5. | ஸுந்தர காண்டம் | ரூ. 12-50 |
| 6. | யுத்த காண்டம் | ரூ. 9-00 |
| 7. | உத்தர காண்டம் | ரூ. 6-00 |
| 8. | ராமாயண நோட்டுகள் | ரூ. 8-00 |

—லிப்கோவின் புதிய வெளியீடுகள்:—

| | | |
|---|---|---|
| 1. | ஸகல கார்யஸித்தி தரும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்-தேவநாகரியிலும் தமிழிலும் | ரூ. 6.00 |
| 2. | „ தமிழில் | ரூ. 1.00 |
| 3. | ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்-தமிழில் | ரூ. 1.00 |
| 4. | ஸ்ரீ துர்கா ஸஹஸ்ரநாமம்-தமிழில் | ரூ. 1.00 |
| 5. | ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ ஸஹஸ்ர நாமம் - தமிழில் | ரூ. 1.00 |
| 6. | ஸ்ரீ மஹா பக்த விஜயம் | ரூ. 4.50 |
| 7. | ஸ்ரீமத் பகவத் கீதை-உரையுடன் | ரூ. 4.00 |
| 8. | ஸ்ரீ அபிராமி அந்தாதி (ஸகல கார்ய ஸித்தியுடன்) - மூலம் | ரூ. 0.50 |
| 9. | ஸ்ரீ ஸௌந்தர்யலஹரி (ஸகல கார்ய ஸித்தியுடன்) - மூலம் தமிழில் | ரூ. 0.60 |
| 10. | ஸகல கார்யஸித்தியும் ஸ்ரீ தேவீ பாகவதமும் | ரூ. 2.25 |
| 11. | ஆறுமுகனுக்குகந்த ஆறு படைவீடுகள் | ரூ. 3.75 |
| 12. | திருப்புகழ் மஞ்சரி | ரூ. 1.30 |
| 13. | ஸ்ரீ சனிக்ரஹ சாந்தி பூஜா விதானம் | ரூ. 1.30 |
| 14 | ஸ்ரீ ஸத்யநாராயண வ்ரதம் | ரூ. 0.80 |
| 15. | உங்கள் பிறந்த தேதியும் வாழ்க்கை ரகசியங்களும் | ரூ. 2.00 |
| 16. | சமைப்பது எப்படி? | ரூ. 2.00 |

இலவச முழு விலைப் பட்டியலுக்கு எழுதுக:

—— பதிப்பகத்தார் ——

## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

சென்னை-17 அல்லது திருச்சி-2

லிப்கோ புத்தகங்கள் M. தாமோதரம் & கம்பெனி, 108, கார்ப்பொரேஷன் பழக்கடை, சென்னை-1; ஹிக்கின்பாதம்ஸ் ரெயில்வே ஸ்டால்கள்; மற்றும் — எல்லாம் புத்தகக் கடைகளிலும் கிடைக்கும். —

RAE

# நெடுஞ்சாலைகள் நல்லின்பப் பாதைகளாய் அமைய...



# கான்க்ரீட்டினால் அமைந்திட வேண்டும்.

காரணம், உயர்தரமான சாலைகளை அமைத்திட உதவுவது கான்க்ரீட். உயர்தரமான கான்க்ரீட் சாலைகளை அமைத்திட உதவுவது ஏஸிஸி.
அச் சாலைகள்...

- பளுவான வண்டிச் சுமைகளைத் தாக்குப் பிடிக்கும்.
- ஓட்டுவதற்குப் பாதுகாப்பானவை, வசதிமிக்கவை.
- பகலும் இரவும் பார்க்கத் தெளிவாகக் காட்சி தரும்.
- எல்லாப் பருவங்களிலும் இடையறாப் பணிபுரியும்.
- பராமரிப்புத் தேவையோ வெகு சொற்பம். எனவே, உன்னதமான சிக்கனம்.

**ACC** தரத்தின் சிகரமான தயாரிப்புகளுக்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்.

தி அஸோஸியேடெட்
ஸிமெண்ட் கம்பெனீஸ் லிட்.
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கோ
ஆப் இந்தியா லிட்.

everest/208b/ACC TM

வில்லை. யுத்தத்தின் போக்கு பிரிட்டன் முதலிய நேச நாடுகளுக்குச் சாதகமாக இல்லாத சமயம் அது. ஜப்பான் படையெடுத்து வரக்கூடும் என்ற வதந்தி எங்கும் பரவியிருந்தது. இவ்வாறாக யுத்தத்தில் நெருக்கடி நிலைமை முற்றியிருந்தபோதிலும் பிரிட்டிஷாருக்கும் காங்கிரஸுக்குமிடையே முறிந்துபோன பேச்சு வார்த்தை மட்டும் புத்துயிர் பெறவில்லை. இச்சமயத்தில் ராஜாஜி தீர்க்கமாகச் சிந்தனை செய்து, முன்பே தாம் வற்புறுத்தி வந்தது போல் முஸ்லிம் லீகுடன் சமரசம் செய்துகொள்ள வேண்டும் என்ற கருத்தை முன்னிலும் அழுத்தமாக, வெளிப்படையாக எடுத்துரைக்க முடிவு செய்தார். அமிர்தம் கடைந்ததில் புறப்பட்ட ஆலகாலத்தை யாரோ ஒருவர் எடுத்துக் கொள்ளத்தான் வேண்டியிருந்தது. ஆலகாலத்தைப் பானம் செய்யும் அந்தத் தீர சாகஸத்தை ராஜாஜியே மேற்கொண்டிருந்தார். ஆயினும் தீய எண்ணத்தினர் கிளப்பிய கூச்சலிலும் புழுதியிலும் அந்த மாவீர சாகஸத்தின் பெருமையை உணர நாடு தவறியது. அதுமட்டுமல்ல. அவரது செயலுக்கு விபரீத அர்த்தமும் கற்பிக்கப்பட்டது.

தம்மீது சுமத்தப்பட்ட அபாண்டப் பழி குறித்து நொந்துபோனார் ராஜாஜி. ஆயினும் தேசத்தின் சிக்கல் முற்றிவிட்டதையும், அதற்குத் தீர்வு காண்பது அத்தியாவசியமாகிவிட்டது என்பதையும் கருத்தில் கொண்டு, தம் இதயத்தையே திறந்து கொட்டினார்; பரிபூரண எளிமையுடன் எழுதினார்: ''என் யோசனையை நீங்கள் ஏற்றுத்தான் ஆகவேண்டும் என்று நான் சொல்லவில்லை. இதைவிடச் சிறந்த ஓர் உபாயம் காணப்பட்டால், நான் மிக மிக மகிழ்ச்சி அடைவேன். நான் விரும்புவதெல்லாம் இதுதான்: ஒன்றைத் தொடர்ந்து இன்னொன்றாகப் பரவி வரும் விஷச் சுருளை ஏதோ ஓரிடத்தில் தடுத்து நிறுத்த வேண்டும். எப்படியேனும் ஒரு சமரச முடிவுக்கு வந்தாக வேண்டும். இந்தச் சமரசம் ஏற்பட்டாலொழிய சிக்கல் நீடித்துக்கொண்டேதான் இருக்கும். அதை அநுமதிக்கலாகாது.'' இதை ஆணித்தரமாக விளக்க ஒரு குட்டிக் கதை சொன்னார்: ''ஒரு மாமியாருக்கும் மருமகளுக்கும் இடையே பூசல் உண்டாயிற்று. இருவரும் விடாமல் சண்டை பிடித்தபடி இருந்தனர். இந்த மனஸ்தாபத்தில் அவர்களில் யாருமே வீட்டுக்காரனுக்குச் சோறு போடவில்லை. அவன் பட்டினி கிடக்க வேண்டியதாயிற்று. பிரிட்டிஷாருடன் நமக்குள்ள பூசலை நீடித்துக்கொண்டே போய்த் தேசத்தை அவதிக்கு ஆளாக்காமல் இருப்போமாக!'' இப்படி எச்சரித்தார் ராஜாஜி.

தமது கருத்தை விளக்கிப் பொதுமக்களின் ஆதரவைப் பெறுவதற்காக 1942 மே மாதம் இரண்டு வாரச் சுற்றுப் பயணம் மேற்கொண்டார். நான் உடன் சென்றேன். அபிப்பிராய பேதம் நிலவுவதை அவர் கண்டார். ஆயினும் அவர் கூறிய தீர்வுஎன்னவென்று பூரணமாகப் புரிந்துகொள்வதில் அனைவருக்கும் ஆர்வம் இருந்தது. அவரது கருத்துக்குக் கணிசமான ஆதரவு இருந்தும்கூட ஆதரவாளர்கள் அவரைப் பின்பற்றத் தயங்கிக் கும்பலோடு



''திருப்பதிக்குப் போய் வரும் விமானப் பயணிகளுக்கு மட்டும் சாக்லெட்டுக்குப் பதிலாக லட்டு, வடை தரும்படி ஏற்பாடு செய்திருக்கோம்!''

'கோவிந்தா' போடுவதையே சிலாக்கியமாகக் கருதினர். இதுகுறித்தே ராஜாஜி வருந்தினார்.

இந்தப் பயணத்தின்போது அவர் சென்ற முக்கிய நகரங்களில் ஒன்று மதுரை. ராஜாஜி பொது வாழ்வு தொடங்கியதிலிருந்து ஒரே சீராக அவரிடம் ஆழ்ந்த விசுவாசம் காட்டித் தீவிர ஆதரவு தந்திருப்பது மதுரை. இம்முறை அவருக்கு மதுரை தந்த வரவேற்பில் பழைய மரியாதையும் அன்பும் இருந்தது வாஸ்தவம். ஆயினும் முன்பெல்லாம் கொந்தளித்த உற்சாகம் இப்போது ஏனோ இல்லை. இந்த 'விட்டேற்றி மனப்பான்மையைச் சிலர் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டனர். இதன் விளைவாக ராஜாஜி பேசிய பொதுக்கூட்டத்தில் சிலர் எதிர்ப்புக் கோஷங்களை எழுப்பினர். ராஜாஜி அவர்களை மீண்டும் குரல் எழுப்பச் சொன்னார். அந்த ஓசையின் பரிமாணத்திலிருந்து அவர்கள் எத்தனை பேர் என்று தாம் கணித்துக்கொள்ள முடியும் என்றார். உடனே அவர்களும் தங்களால் முடிந்த அளவுக்கு உரத்த குரலில் கூச்சல் எழுப்பினர். ''கூச்சல் போடுவதால் பாகிஸ்தான் ஏற்படாமல் துரத்த முடியுமாயின் இப்போதே துரத்தியாகிவிட்டது!'' என்றார் ராஜாஜி. ஜ்வாலை வீசுகிற கேலி மொழி!

கூட்டம் முழுதும் கேலிச் சிரிப்பில் 'ஹோ' வென்று ஆர்த்தது. உடனே பின் வரிசையில் இருந்த சிலர் மண்ணை வாரி விட்டனர். சில கற்களும் பறக்கலாயின. சில நிமிடங்கள் ராஜாஜி பொறுத்துப் பார்த்தார். போக்கிரித்தனம் தலைதூக்குகிறது என்று கண்டார். அவ்வளவுதான்! அந்த அறுபத்தைந்து வயது இளைஞர் திடுமென்று மேடையிலிருந்து குதித்தார். கூட்டத்தை இடித்து விலக்கி வழி செய்து கொண்டு, நேரே ஆர்ப்பாட்டக்காரர்கள் இருந்த இடத்துக்கே சென்று விட்டார்.

''என்னைத் தாக்க விரும்புகிறீர்கள். அப்படித்தானே? தாக்க வாருங்கள். இதோ வந்து நிற்கிறேன். நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யலாம்'' என்றார் ராஜாஜி. இப்படிச் சொல்லிக்கொண்டு அவர்களுக்கு நட்ட நடுவிலேயே புகுந்து விட்டார்.

விஷமிகள் அடியோடு விலவிலத்துப்போயினர். இமைப்பொழுதில் அந்த ஒருசிலர் கூட்டத்தோடு கூட்டமாகக் கரைந்து மறைந்து விட்டனர்.

பூர்வத்தில் ராஜாஜி செய்திருந்த வீரச் செயல்கள் பற்றிய கதைத் துணுக்குகள் பல கேட்டிருக்கிறேன். இப்போது கண்ணுக்கு நேரே, நலிந்த உடலிலும் அந்தத் தீரத்தின் சுடர் தெறிப்பதைக் கண்டேன்.

ராஜாஜியின் நீண்ட பொது வாழ்வில் 1942லிருந்து 1946 வரையில் அவர் கண்ட அநுபவம் தனியானது. ஒரு விதத்தில் அவர் எப்போதுமே அநுபவித்திராத இருள் கட்டம் அது எனலாம். இன்னொரு கோணத்தில் பார்த்தாலோ, அதுவே அவரது வாழ்வில் மற்றுமொரு புகழ் கொண்ட கட்டம் என்றும் கூறலாம். மக்கள் பணியில் அவருக்கு இருந்த அஞ்சா நெஞ்சத்தையும், இலட்சியத்தில் அவருக்கு இருந்த ஆழ்ந்த பிடிப்பையும், அவரது அரசியல் தீர்க்க தரிசனத்தையும் வெளிச்சமிட்டுக் காட்டிய கட்டம் இதுவே. இந்தச் சிறப்பியல்புகளோடு வி. பி. ராமசாமி அய்யரவர்கள் குறிப்பிட்ட, ''மகத்தான சுயப் பற்றின்மை''யும் இந்த இருள் கட்டத்தில் பிரகாசமாக வெளிப்பட்டது. இப்படிப்பட்ட குணநலன்கள் வாய்த்திருப்பதால்தான் வந்தனையையும் நிந்தனையையும் பொருட்படுத்தாமல், எது சரியோ அதிலேயே ராஜாஜியால் ஈடுபட்டிருக்க முடிகிறது.

1947லிருந்து 1950 வரை மேற்கு வங்க கவர்னராக இருந்தார் ராஜாஜி. அப்போது ஹிந்து முஸ்லிம் மனக் கசப்பை நீக்குவதிலும் பிரிவினைக்குப் பின் ரத்தக் களரியான அந்த மாநிலத்தைப் புத்துயிர் பெறச் செய்வதிலும் கவர்னர் ராஜாஜி செய்த பெரும் பணி சரித்திர முக்கியத்வம் வாய்ந்ததாகும். அதன் பின் கவர்னர் ஜெனரலானார். அப்போது அவர் சந்தடி இல்லாமலே ஒரு முக்கியமான பொறுப்பினை ஆற்றினார். அதாவது சுதேச சம்ஸ்தானங்கள் இந்திய யூனியனுடன் ஒருங்கிணைவதிலும், பரஸ்பரம் தன்னம்பிக்கையுடனும் மன இசைவுடனும் உறவு கொள்வதிலும் அவர் முக்கியமான பங்கு பற்றினார். பழைய சுதேச சம்ஸ்தானங்கள் சிலவற்றுக்கு அவரோடு கூடச் சென்றிருந்தேன். இதைப் பெருமிதத்துக்குரிய அலாதியான கௌரவமாகக் கருதுகிறேன். இச்சமயங்களில் தமது கம்பீரமான பெருந்தன்மையாலும், ராஜநீதி நிபுணத்தன்மையாலும் அநுதாப இதயத்தாலும் அவர் எவ்வளவு எளிதில் சம்ஸ்தான மன்னர்களின் பெரு மதிப்பைப் பெற்றார் என்பதையும் இதனால் அவர்கள் மனமார்ந்த நம்பிக்கையோடு இந்திய யூனியனுக்கு ஆதரவு நல்குமாறு செய்தார் என்பதையும் கண்கூடாக அறிந்தேன்.

மிகப் பெரிய மனிதரிலிருந்து தொடங்கி மிக எளிய தொண்டர் வரையில் எவராயினும் ஒரு காரியத்தைத் திறம்பட முடித்ததாகக் கண்டால் அதை ராஜாஜி பாராட்டுகிற விதமே தனியானது. பகட்டாகப் பாராட்டுக் கூறமாட்டார். நுட்பமான முறையில் தமது பாராட்டை வெளிப்படுத்துவார். இது போன்ற சில சின்னச் சம்பவங்கள் என் நினைவில் வருகின்றன.

1952ம் ஆண்டில் ராஜாஜி இரண்டாம் முறையாக முதன் மந்திரி ஆனார் அல்லவா? அப்போது அவர் சுமார் பதினைந்தாண்டுகளுக்கு முன் தாம் பதவி வகித்தபோது தம்மிடம் பணி செய்த ஒரு மலையாளி அட்டெண்டரை நினைவுகூர்ந்தார். அந்த அட்டெண்டரின் சுறுசுறுப்பும், யோக்கியமான நடத்தையும் ராஜாஜியின் நினைவிலேயே இருந்திருக்கின்றன. மறுபடியும் அவரையே தமது முக்கியமான சேவகராக அமர்த்திக் கொண்டார். அந்த ஊழியருக்கு உண்டான மகிழ்ச்சி சொல்லத் தரமன்று.

1948ல் கவர்னர் ஜெனரலாக இருந்த ராஜாஜி பெங்களூருக்கு விஜயம் செய்தார். ஆதியில் தாம் பெங்களூர் சென்ட்ரல் கல்லூரியில் படித்த நாட்களை நினைவுகூர்ந்து பேசினார். தாம் படித்தபோது கல்லூரியில் பணியாற்றிய ஒரு திறமைசாலியான விரிவுரையாளரைப் பற்றியும் சிலாகித்துக் கூறினார். பிறகு அந்தக் கல்லூரிக்கே சென்றார். அப்போது கல்லூரி வாயிலில் தாம் குறிப்பிட்ட அதே விரிவுரையாளரான ஸ்ரீ எம். விஜயராகவாச்சாரியார் தம்மை வரவேற்கக் காத்துக் கொண்டிருப்பது கண்டு ஆச்சரியமும் மகிழ்ச்சியும் ஒருங்கே கொண்டார். எண்பதுக்கும் மேல் எத்தனையோ வயதாகி விட்ட அந்த ''குரு''வும், ''சிஷ்யர்'' ராஜாஜியும் பல்லாண்டுகளுக்குப் பின் சந்தித்து முகமன் கூறிக் கொண்டனர். இந்தக் காட்சியைக் கண்டு கூடியிருந்த மாணவர், ஆசிரியர், மக்கள் அனைவரும் ஆரவாரம் செய்தனர். தமது பழைய ஆசிரியர்களுக்கும் அந்தக் கல்லூரிக்கும் தாம் பட்டுள்ள நன்றிக் கடனைப் பற்றி ராஜாஜி உணர்ச்சியுடன் பேசினார். ''இது நல்ல கலாசாலை. இப்போது எனக்கு வாய்த்துள்ள செயற்கையான அந்தஸ்தினால் இந்தக் கலாசாலைக்கு என்னாலான பணியைச் செய்கிறேன். இது குறித்து மகிழ்கிறேன். ஆனாலும் இன்றைய என் அந்தஸ்துக்கும் நான் கற்ற கல்விக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. ஏனெனில் என்னுடைய கல்வி மட்டும் உரியபடி நிறைவு பெற்றிருந்தால் நான் ஒரு பள்ளி உபாத்தியாயராகவோ, கல்லூரி ஆசிரியராகவோ தான் ஆகியிருப்பேன். மாறாக இப்போது நான் ஒரு நாடோடியாகியிருக்கிறேன்.'' அவர் இப்படிச் சொன்னபோது பலத்த கரகோஷமும் சிரிப்பும் எழுந்தன.

கல்லூரியில் தாம் சிறப்பு மாணாக்கனாகத் திகழவில்லை என்று கூறிய ராஜாஜி, ''அப்போது எனக்குக் கற்பிக்கப்பட்டதில் இன்று எதுவுமே நினைவில்லை!'' என்றார். ''ஆயினும் எனக்கு ஒரு விஷயத்தில் சந்தோஷமே. அதாவது நான் ஒரு நல்ல பிரஜை என்று சொல்லிக் கொள்ள முடியும். நல்ல கல்லூரி ஒன்று மாணவனுக்குச் செய்யக் கூடிய தலைசிறந்த உபகாரம் இதுவே'' என்றார்.

(அடுத்த இதழில் முடியும்)




மனங்கவரும்
பாயில் பேக்—
நயமான விலை

# இதோ!

புதிய பார்லே

# தின் ஆரோரூட்

## போஷாக்கான பிஸ்கட்

முரமுரப்பானது, சக்தி மிக்கது—
சுலபமாக ஜீரணமாகிறது!
சாப்பிட ருசியானது!.

**புதுப் பொலிவுக் குன்றுமல் அமைந்த கவர்ச்சியான பேக்குகளில்**

everest/325d/PP tam

"இந்தப் பெண்ணை வழிக்குக் கொண்டு வர ஒரு 'பிளான்' போட்டிருக்கிறேன்" என்றாள் மரகதம்.

"என்ன?" என்று கேட்பதுபோல் மனைவியை ஏறிட்டுப் பார்த்தார் தாமோதரன்.

"நாளைக்குச் சாந்தியைக் கொண்டு வந்து விடுகிறார்களில்லையா? அவளை ஆட்டிப் படைப்பதன் மூலம் இவளை அடக்கி விடுகிறேன், பாருங்கள்" என்றாள் அவள்.

தாமோதரனுக்கு நெற்றி சுருங்கியது. கண்களில் சிவப்பு படர்ந்தது.

"மரகதம்!" என்றார் சீற்றத்துடன். அதற்கு மேல் எதுவும் பேசவில்லை. ஆனால் அந்த ஒரு வார்த்தையே அவளுடைய யோசனையை அவர் கடுமையாக எதிர்க்கிறார் என்பதைத் துல்லியமாகத் தெரிவித்தது.

மரகதம் சிரித்தாள்.

"மாமியார்க் குணத்தைக் காண்பிக்கப் போகிறேன் என்பது உங்கள் நினைப்பு. அப்படித்தானே?" என்றாள்.

அவர் எதுவும் சொல்லவில்லை. வெறுமனே விழித்துப் பார்த்தார்.

அவள் விஷயத்தை விளக்கிச் சொன்னாள். முழுவதையும் கேட்டுக் கொண்ட தாமோதரன், அவள் யோசனைக்குப் பூரண சம்மதம் கொடுக்காவிட்டாலும், அவர் முகத்தின் கடுமை என்னவோ கொஞ்சம் குறைந்துதான் இருந்தது.

"நம் பெண் இருந்தா விட்டாலும் பரவாயில்லை. அந்தப் பெண் கண் கலங்கி நிற்கும்படியாக ஆகிவிடக் கூடாது. ஜாக்கிரதை!" என்று எச்சரித்து விட்டு எழுந்து போனார்.

மறுநாள் காலை சாந்தி வந்து விட்டாள். மரகதத்தின் மகன் மணியின் மனைவி அவள். கல்யாணமாகி முப்பது நாட்கள்தான் ஆகிறது. இப்போதுதான் முதன்முதலாக அவள் புக்ககம் வந்திருக்கிறாள்.

வீடு கலகலவென்று இருந்தது. மரகதத்தின் பெண் லதா, 'மன்னி, மன்னி' என்று சாந்தியையே சுற்றிச் சுற்றி வந்தாள். இருவருமாக வெளியே போனார்கள். சினிமாப் பார்த்தார்கள். புத்தகம் படித்தார்கள்.

இரண்டு நாட்களாயிற்று. சாந்தியைக் கொண்டு விடுவதற்காக வந்திருந்த அவள் பெற்றோர் ஊருக்குத் திரும்பினர்.

மணியும் 'காம்ப்' கிளம்ப ஆயத்தமானான். ஆபீஸ் விஷயமாக அவனுக்கு வெளியூரில் ஒரு வாரத்துக்கு வேலை இருந்தது. இது தெரிந்துதானே மரகதம் அப்படியொரு திட்டம் போட்டாள்!

திரும்பத் திரும்பச் சாந்தியிடம் விடை பெற்றுக் கொண்ட மணியைப் பார்த்து, "அண்ணா! கவலைப் படாமல் போயிட்டு வா. மன்னியை நான் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்கிறேன்" என்றாள் லதா குறும்புடன்.

"நீ பார்த்துக் கொள்கிறாய் என்கிறதுதானே என் கவலை!" என்று அவளுக்குப் பதிலடி கொடுத்த மணி, "என் அம்மா இருக்கும்பொழுது என்றைக்கும் எதற்காகவும் நான் கவலைப்படவே மாட்டேன்!"



என்று சொல்லிவிட்டுப் பாசம் பொங்க மரகதத்தைத் திரும்பிப் பார்த்தான்.

அவன் அம்மா பிள்ளை. அவனுக்கு அவளிடம் அளவு கடந்த அன்பு உண்டு. மரகதத்துக்கு மட்டுமென்ன? அவளின் உயிரே அவன்தானே?

மகன் சொன்னதைக் கேட்டுப் பூரித்துப் பொங்க வேண்டிய அவள் மனம் இன்று சஞ்சலப்பட்டது.

இப்படிப்பட்ட அன்பு மகனின் அருமை மனைவியிடம் கடுமையாக நடந்துகொள்ள, இல்லே, நடித்தாக வேண்டுமே என்பதை நினைக்கும்போது, அவளுக்கு நெஞ்சு வலித்தது. 'ஆனாலும் தன் மகனின் வருங்கால நன்மையை உத்தேசித்துச் சண்டித்தனம் செய்' உள்ளத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டாள் மரகதம்.

அன்று மாலை வெளியே கிளம்பிக் கொண்டிருந்த மரகதத்திடம், வந்த லதா, ''என்னம்மா ராத்திரிக்குச் சமையல் எதுவும் செய்யாமல் புறப்பட்டுட்டியே! வருவதற்கு எட்டுமணி ஆகும்னு சொல்லறே? அப்பாவுக்கு எட்டேகாலுக்குச் சாப்பிட்டாக வேண்டும் என்பது நினைவில்லையா உனக்கு?'' என்று கேட்டாள்.

''அதை மறப்பேனாடி நான்?'' என்ற மரகதம், சாந்தியைக் கூப்பிட்டு, ''சாந்தி! புடலங்காய் வாங்கி வைத்திருக்கிறேன். அதைப் பொரிச்ச கூட்டு செய்திடு. துவரம் பருப்புத் துவையல் அரைத்து, மிளகு ரஸம்



# நடிகையர் திலகம்

கஸ்தூரி பஞ்சு

வைத்துவிடு. போதும். சாதம் போட நான் வந்து விடுவேன்'' என்றாள்.

லதா, இதைப்பார்ன் அம்மாவை விழித்துப் பார்த்தாள். சாந்தியோ, பதுமையாகத் தலையைக் குனிந்தபடி நின்று கொண்டிருந்தாள். மரகதம் எதையுமே கவனிக்கவில்லை. செருப்பை மாட்டிக் கொண்டு படி இறங்கிப் போயே விட்டாள்.

அன்று இரவு அந்த வீட்டில் எல்லோருக்குமே ஏகாதசிதான். சமைத்த பண்டங்கள் எதிலும் ஒரு கரண்டி கூடக் குறையாமல் அப்படியே இருந்தது. எப்படிக் குறையும்? பொரித்த கூட்டுக்குப் போடாத உப்பைத் துவையலில் போட்டு அரைத்திருந்தாள் சாந்தி. மிளகு ரஸமோ வெறும் புளித் தண்ணீராக இருந்தது.

மரகதத்தின் கோபம் கடும் சொற்களாக வெளிவந்தன. சவுக்கடி போல் சாந்தியைத் தாக்கிற்று. அதன் பிரதிபலிப்பு பயங்கர மௌனமாக வீடெங்கும் பரவ, அவரவர் படுக்கையில் விழுந்தனர்.

நடு நிசி. 'விக் விக்' கென்ற கேவல் சத்தம் கேட்டுக் கண் விழித்த மரகதம், அழுவது லதா என்பதை அறிந்து, பரபரப்புடன், ''ஏண்டி லதா, நீ ஏன் அழறே?'' என்று கேட்டாள்.

''அம்மா! நீ எப்போ அம்மா இப்படிக் கொடுமைக்கார அம்மாவாக மாறினே? என்னால் தாங்கவே முடியவில்லையே!'' என்று சொல்லி விட்டு லதா மீண்டும் தேம்ப ஆரம்பித்தாள்.

''என்னடி லதா சொல்லறே நீ? எனக்கு எதுவுமே புரியவில்லையே!'' என்ற மரகதம் அவளருகில் நகர்ந்து உட்கார்ந்து, அவள் கண்களைத் துடைத்து விட்டாள்.

''உனக்கு எப்படிப் புரியும்? புரிந்தால் இப்படிச் செய்வாயா?'' என்று வெடித்த லதா, ''சாந்தி மன்னிக்குச் சமையல் தெரியாது என்பது உனக்குத் தெரியாதா? அதுவும் தவிர மன்னி என்ன நமக்குப் புதியவளா? ஒரு வருடமாகத்தானே அவர்கள் வெளியூரில் இருக்கிறார்கள்? அதற்கு முன்னால் இதே ஊரில், இதே தெருவில், ஏன் நாளின் முக்கால் வாசிப் பொழுதும் நம் வீட்டில் கழித்தவள்தானே அவள்? கல்யாணத்துக்கு முன்னால் கூட அவள் அம்மா, 'சாந்திக்கு இன்னமும்

சமைக்கவே தெரியவில்லை! என்று சொன்னபோது, 'அதனால் என்ன? சொல்லிக் கொடுத்தால் போயிற்று' என்று பதில் சொன்ன நீ, இன்று ஏன் இப்படிக் கத்துகிறாய்?'' என்றான்.

''சுபத்தியக்காரப் பெண்ணே! கல்யாணத்துக்கு முன்னால் ஆயிரம் சொல்லியிருப்பேன். அதையெல்லாம் அப்படியே வேத வாக்காகப் பாவித்துக் கொள்வதா என்ன? மாமியார் என்றால் வேலை வாங்கித்தான் ஆகணும். மருமகள் அதைச் செய்துதான் தீரணும். இல்லையோ இந்தக் கதிதான். நான் என்ன சொல்லி யிருந்தாலும் அவள் கொஞ்சமாவது காரியம் கற்றுக் கொண்டு வந்திருக்க வேண்டாமா? இல்லை, அவள் அம்மாதான் இதை எதிர்பார்த்துக் கற்றுக் கொடுத்திருக்க வேண்டாமோ? நீ பேசாமல் இரு. இன்னும் நாலைந்து நாட்களுக்கு நான் இப்படி ஆட்டிப் படைத்தால் தன்னைப்போல் காரியம் வந்து விடாதா?'' என்று சொல்லிப் படுத்துக் கொண்டு விட்டாள் மரகதம்.

லதா வெலவெலத்துப் போனாள். அவள் மனக்கண்ணின் முன் பயங்கரமான பல காட்சிகள் பூதாகாரமாகத் தோற்றமளித்தன.

சாந்தி வீட்டாருக்கும் தங்களுக்கும் நீண்ட வருடப் பழக்கம் இருந்தும் கூட மாமியார் என்கிற ஸ்தானத்துக்கு வந்து விட்டதும், தன் அம்மா இந்தப் போடு போடும்போது, முன் பின் அறிமுகமில்லாத தன் எதிர்கால மாமியார் சமையல் தெரியாத தன்னை எப்படியெல்லாம் ஆட்டிப் படைப்பாளோ என்று நினைத்தபோது அவள் நெஞ்சு மட்டுமின்றி, உடம்பு முழுதுமே நடுங்கித் துடித்தது.

அவள் மனம் ஒரு முடிவுக்கு வந்துவிட்டது.

**ம**று நாள் காலை அவள் அதை மரகதத்திடம் சொன்னபோது அவள் அப்படியே பூரித்துப் போனாள்.

தாமோதரனைத் தேடி ஓடிய மரகதம், ''பார்த்தீர்களா, என்னுடைய ஒருநாள் ஆட்டம் இந்தப் பெண்ணை எப்படி வழிக்குக் கொண்டு வந்து விட்டது! அடுத்த மாதம் கல்யாணமாகப் போகிறதே, போகிற இடம் எப்படி இருக்குமோ, கொஞ்சம் காரியம் செய்யக் கற்றுக்கொள் என்று நான் மன்றாடிய போது முரட்டுத்தனமாக மறுத்தவள், இப்போது தானாகவே பணிந்து பேசுகிறாள். அத்தையின் ஊருக்கு இன்றே போவதாகச் சொல்கிறாள். உங்கள் தங்கை பத்தே நாட்களில் அவளைச் சமையலில் தேர்ந்தவளாக்கி விடுவார். மணி வரும்போது, இவளை அழைத்து வரும்படி எழுதிவிடலாம், என்ன?'' என்றாள்.

''உம்... எல்லாம் சரிதான். ஆனால் அந்தப் பெண் சாந்தி உன்னை ரொம்பத் தப்பாக நினைத்து விட்டிருக்கப் போகிறாளே, எப்போது அவளிடம் உண்மையைச் சொல்லப் போகிறாய்?'' என்று கேட்டார்.

''அந்தக் கவலை எனக்கு மட்டும் இல்லையா என்ன? லதாவைச் சாயங்காலம் ரயிலேற்றி அனுப்பிவிட்டுத் திரும்பியதும், சாந்தியிடம் நடந்ததை யெல்லாம் சொல்வதுதான் என் முதல் வேலை'' என்றாள் மரகதம்.

லதா ஊருக்குப் போய் விட்டாள். ஸ்டேஷனிலிருந்து தாமோதரனும், மரகதமும் வீடு திரும்பினபோது கூடத்தில் உட்கார்ந்திருந்த சாந்தி, கைகளில் முகத்தைத் தாங்கிக் கொண்டு குனிந்து உட்கார்ந்திருந்தாள். அவள் உடம்பு குலுங்கிற்று.

பதைத்துப் போனார் தாமோதரன். ''அடி மரகதம்! அங்கே பாரேன், சாந்தி என்னமாக அழுது கொண்டிருக்கிறாள்?'' என்றார்.

மரகதமும் துடித்துத்தான் போனாள். நாலே எட்டில் அவளை அடைந்து, அவள் முதுகைத் தடவிக் கொடுத்து, ''சாந்தி...!'' என்று கூப்பிட்டு, அடுத்த வார்த்தையைச் சொல்வதற்குள் சரேலென்று எழுந்து கொண்ட சாந்தி, சிட்டாகப் பறந்து சமையல் அறைக்குள் மறைந்தாள்.

''மரகதம், போ... போ... நீயும் பின்னாடு சீக்கிரமாகச் சென்று சமாதானப் படுத்து. உண்மைகளைச் சொல்லிவிடு. அவள் ரொம்ப அழுகிறாள் போலிருக்கிறதே'' என்று தவித்தார் தாமோதரன்.

''சாந்தி... சாந்தி....'' என்று கூவிக் கொண்டு, அவளைப் பின்தொடர்ந்து போன மரகதம், அப்படியே அயர்ந்து நின்றாள்.

காரணம், சாந்தி விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருந்தது மட்டுமில்லை. அவளுக்குப் பக்கத்திலிருந்து சமையல் மேடையின் மீது ஒரு ஸ்டவ்வில் வெங்காய சாம்பார் 'கம கம'வென்று வாசனையை நாலா புறமும் வீசியபடி கொதித்துக் கொண்டிருந்தது. அதற்கடுத்தாற்போல, உருளைக் கிழங்கு பொரியல் மசாலாக் கலவையுடன், தங்க நிறத்தில், தயாராகிக் கொண்டிருந்தது.

''சாந்தி... உனக்குச் சமைக்க....'' இழுத்தாள் மரகதம்.

''நன்றாகத் தெரியும். கல்யாணமான பிறகு இந்த ஒரு மாதத்தில் கற்றுக் கொண்டு விட்டேன். லதாவின் பிடிவாதக் குணத்தை மாற்ற, தெரியாததுபோல் நடித்தேன்...'' சாந்தி மறுபடியும் சிரிக்க ஆரம்பித்தாள், ஏற்கனவே சிரித்துக் கொண்டிருந்த மரகதத்துடன் சேர்ந்து.

வாசற்படியில் வந்து நின்று, நடந்த சம்பாஷணைகளைக் கேட்டுக் கொண்டிருந்த தாமோதரன், ''எனக்குத்தான் இப்போது ஒரு பெரிய பிரச்னை. உங்கள் இருவரில் யாருக்கு நடிகையர் திலகம் என்னும் பட்டம் கொடுப்பது என்று தெரியாமல் தடுமாறுகிறேன்'' என்றார். அவர் குரலில் குதூகலம் குதி போட்டது.



தோற்றம் : 26-4-1904
மறைவு : 24-10-1972

எங்களது தகப்பனார் திரு அனந்தராமய்யர் (Retd. Supdt. D.G.O.F. Office, Calcutta-1, ரஸிக ரஞ்சன சபா, கல்கத்தா ஸ்தாபகர்) அவர்களது மறைவு குறித்து ஆறுதல் கடிதங்கள் அனுப்பிய நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் எங்களது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அவரது ஆன்மா அமைதியாக சாந்தி நிலையை அடையவும் மற்றும் எங்களுக்குத் தொடர்ந்து தெய்வமாக இருந்து வழி காட்ட வேண்டுமென்றும் பிரார்த்திக்கிறோம்.

A. சுப்பிரமணியம், H. A. L. Bangalore
ஜெயலக்ஷ்மி வெங்கடாசலம், கல்கத்தா
A. வெங்கட்ராமன், Kaveri Structurals, Trichy
ராஜலக்ஷ்மிபாலசுப்பிரமணியன். சென்னை



## வள்ளலார் வரலாறு

வள்ளற்பெருமானாகிய இராமலிங்க சுவாமிகள் சென்னையில் ஏறத்தாழ 30 ஆண்டு காலம் வாழ்ந்திருக்கிறார்கள். சென்னையில் வாழ்ந்த காலத்தில் அவர்கள் வாழ்வில் நிகழ்ந்த சில சம்பவங்கள், கர்ண பரம்பரையாகத் தெரிந்த செய்திகள், ஆதாரபூர்வமான குறிப்புகள் முதலியவற்றை அன்பர்கள் பலர் பல வகையில் அறிந்திருக்கக்கூடும். அடிகளாரின் வரலாற்று நூல் ஒன்றை எழுதி வெளியிட இருப்பதால் அத்தகைய ஆதாரபூர்வமான செய்திகளை அன்பர்கள் பெற்று கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்புமாறு வேண்டுகிறோம்.

இங்ஙனம்

இராமலிங்கர் பணிமன்றம்
6, போயஸ் தோட்டம்
சென்னை 86

அ. லெ. நடராஜன்


சாதாரண சரும நோய்களுக்கு நிவாரணம்

CIBA

வியோஃபார்ம் க்ரீம்

CIBA/VIO-99 TN




**ஏ**ந்த வேலே செஞ்சா என்ன?

கைச் சுத்தமும் மனச் சுத்தமும் இருந்தா வாழ்க்கையிலே முன்னுக்கு வந்துடலாமே! இது அவருக்கு — என் புருஷனைத்தான் சொல்றேன் — அவருக்குப் புரியணுமே!

எதிலும் ஓர் அலட்சியம்; ஆணவம். தன்னுடையது மாதிரிதானே பிறத்தியாருடையதும் என்ற நினைப்பு இருந்தா இன்னிக்குக் கஷ்டப்பட வேண்டிய நிலைமையே ஏற்பட்டிருக்காது. உலகத்திலே கொஞ்சம் பேருதானே அப்படி நினைக்கிறாங்க.....

அடுப்பிலே பூனை தூங்குது. சரியாச் சாப்பிட்டு மூணு மாசத்துக்கு மேலே ஆகுது. மிச்சமா இருக்கறது தாலி ஒண்ணுதான். அதுக்கும் நாளேக்கோ, நாளேயன்னிக்கோ சனி பிடிச்சுடும்......

கண்ணு கலங்குது; என்ன பண்ணறது?

அண்ணனைப் பார்த்துட்டு வர்றேன்னு போயிருக்கிறாரு. அவருகிட்டே போறதுனாலே புண்ணியமில்லேன்னு எவ்வளவு தடுத்தும் இன்னிக்குப் போயிருக்காரு. அவராவது வேலே கொடுக்கிறதாவது...?

எனக்குந்தான் அண்ணியைப் பார்த்துட்டு வந்தா தேவலேன்னு தோணுது. இன்னுங் கொஞ்ச நாழியிலே வீட்டுக்காரம்மா வந்துடுவா; மூணு மாசக் குடிக்கூலி பாக்கி. 'லோலோலோ'ன்னு கத்தப் போறு...

ஒரு காலத்திலே என்னமா வருமானம் வந்தது! அண்ணனும் இவரும் ஒரே டிரைக்ளீனர்ஸ்லேதான் — சலவை பண்ற லாண்டிரியிலேதான் வேலே பார்த்தாங்க; இன்னிக்கு அண்ணன் சொந்தமா ஒரு 'டிரைக்ளீனர்ஸ்' வைச்சிக்கிட்டு இருக்கிறாரு! அவங்கவங்க செய்யற வேலேயை அவங்கவங்க பூஜிக்கிறதுக்கு ஏத்த மாதிரிதானே வாழ்வும் பலனும் கிடைக்கும்?

இவருகிட்டே எப்பவுமே அவசர அடி; அலட்சியப் போக்கு; அடுத்தவங்க நிலே புரியாத சுயநல மனசு. யார் துணியானாலும் சரி; எவ்வளவு உயர்ந்த துணியானாலும் சரி; காட்டா மோட்டான் நினைப்பிலே இஸ்திரி போடுவார்; ஏன்? மிஷின்லே துணிங்களைப் பிழியப்படக்கூட, அடுத்தவங்க துணிதானேங்கிற அலட்சியத்திலே, 'அது கிழிஞ்சா என்ன?

உருப்படியா வந்தா என்ன?'ங்கிற ஞாபகத் தோடப் பிழிஞ்சு இறக்குவாரு. இதனால் பல பேரோட துணிங்க ரெண்டு மாசத்துலே பழுலாப் போயிடும். துணிக்குரியவங்க வந்து லாண்டரியிலே 'லபோதிபோ'ன்னு கூச்சல் போடுவாங்க; ரொம்ப 'டாமேஜ்' ஆயிட்டா பாதிப் பணம் கறந்துட்டுப் போயிடுவாங்க!

பாதிப் பணம் கொடுக்கிற முதலாளிக்கு நஷ்டம் ஒருபுறம் இருக்கட்டும்; ஐம்பது ரூவா சட்டையை ரெண்டே மாசம் அனுபவிச் சிட்டு, பாதிப் பணம் இருபத்தைந்து ரூபா வாங்கிக்கிட்டுப் போறவங்க மனசு எப்படி இருக்கும்? ஒரு சட்டைக்கு மாசம் பன்னிரண் டரை ரூபா நஷ்டமா ?

இதைப்பார்த்தே ஏழெட்டு லாண்டரிகளிலே இவருக்கு வேலையில்லேன்னு சொல்லி அனுப் பிச்சிட்டாங்க ! மாசச் சம்பளமா இருந்தா ஒரு வேலை பொறுப்போடு வேலை செஞ்சிருப் பாரோ என்னவோ ? 'காண்ட்ராக்ட் பேசி'க் கறதிலே ருசி கண்டுட்டவராச்சே ! ஒரு துணிக்கு இஸ்திரி போட்டா இவ்வளவுன்னு பேசிக்கிட்டு அங்கங்கே வேலை பார்ப்பாரு. அவசரமா போட்டாத்தானே ஒரு நாளைக்கு உருப்படியா ஏதாவது பணம் பண்ண முடியும்? அதனாலே இஸ்திரிப் பெட்டியிலே 'காங்கு' 'சூடு' எப்படி இருக்குன்னுகூடப் பார்க்காம தேய்க்க வேண்டியதுதான்.

முதல் முறையா வந்த புதுத் துணியானு லும் இவரு இஸ்திரி போட்டா மஞ்சள் இருக்குமாம். காரணம் அதிகமான காங்கோடு வைச்சுத் தேய்க்கிறதுதான். பல சமயத்துலே துணியோட தரத்தைக்கூடப் பார்க்கறது கிடையாது. அது டெரிலின இருந்தா என்ன? டெர்ரி காட்டனு இருந்தா என்ன? டெரினு இருந்தா என்ன? சில்க்கா இருந்தா என்ன? எல்லாம் காட்டன்தான் — நூலால் நெசிஞ்ச துணிக்குப் போடற மாதிரிதான்! துணிங்க எப்படி உருப்படியாத் தேறும்? — முத லாளி நட்ட ஈடுகொடுக்க வேண்டியதுதான். இவரு அவசரத்துக்கு உருப்படி எண்ணிக்கை காட்டிப் பணம் பண்ண, இரு தரப்பினரும் நஷ்டமா அனுபவிப்பாங்க ?

இவரால் ஒரு 'டிரை கிளீனர்ஸ்' கம்பெ னியே திவாலாய்ப் போயிட்டது. என்னமோ அண்ணன் மனசு வச்சு அவரு வேலை செய்துக் கிட்டு இருந்த இடத்துலே கொண்டு போய்ச் சேர்த்தாரு. அங்கேயும் பண ஆசை பிடிச்சுத் துணிங்களைத் தேய்க்க ஆரம்பிச்சாரு.

அண்ணன் எவ்வளவோ புத்தி சொல்லிப் பார்த்தாரு. அவரு செய்யற தொழிலைத் தெய்வமா பூஜிக்கிறவரு. ஒரு நாளைக்கு ஐந்து ரூபாய் கிடைச்சாப் போதுங்கிற நிம்மதி யுடன் துணியோடத் தரத்துக்கு எத்த மாதிரி இஸ்திரி போடுவாரு. நிதானமாப் போட்டு அது தன்னோட துணிங்கிற நினைப்போடு அடுக்கி வைப்பாரு. தன்னை நம்பித்தானே அதிகப்படியான விலை உள்ள துணிகளைப் போடறாங்க..... நாம் ஐந்து காசு அவசர ஆசைக்கு ஐம்பது ரூவா துணியைப் பாழாக்க லாமா ?

"சாமிக்கண்ணு ! முதலாளிங்க நல்லா இருந்தாத்தான் அவங்ககிட்டே வேலை செய் யற நாம சௌக்கியமா இருக்க முடியும். நாலுகாசு கூடக் கேட்க முடியும். முதலாளிங்க எப்ப நல்லாயிருப்பாங்க? அவங்ககிட்டே வர்ற 'கஸ்டமர்'ங்க திருப்தியோட இருக்க ணும். 'இன்னிக்குப் பணம் வருதா, ஆளை விடு'ன்னு நாம வேலை பார்க்கக் கூடாது. நீ இப்படி விலை உயர்ந்த துணிங்களுக்குச் சூட்டளவு பார்க்காம இஸ்திரி போடறது அவ்வளவு நல்லா இல்லே; பழைய துணிங் களைச் சின்னாபின்னமா இழுத்துக் கிழிந்து மடித்து இஸ்திரி போட்டுத் தள்ளிவிடறது சரியில்லே; அவசரத்திலே இஸ்திரிப் பெட்டி தேய்க்கிறப்ப நெருப்புப் பொறி படறது. அதனாலே துணி பொத்தலாவது எவ்வளவு பெரிய நஷ்டம் ?"

மச்சினன் ஆச்சேன்னு அண்ணன் புத்தி சொல்லலே. யாராயிருந்தாலும் அண்ணன் அப்படித்தான் சொல்லுவாரு. இவரு கேக்கணுமே !.

"போடா, நீ ஒண்ணு. நான் பூராவும் நீ சொல்றப்பிலே நடந்தா, நாலு காசை நறுக் காப் பார்க்க முடியாது. நம்ம துணியா நிஞ்சிப் போவுது? இதைப் பார்த்தா நம்ம வாழ்க்கைதான் நிஞ்சிப் போயிடும்."

இப்ப இவரு கதி என்னாச்சு ? அந்த முத லாளியும் இவரை வெளியேத்திட்டாரு. அப்புறம் ஒரு மாசம் அடுப்பிலே பூனை; மறு படியும் இன்னொரு திசையிலே வேலை..... சே, என்ன பிழைப்போ ?

அண்ணனைப் பத்தி அந்த முதலாளிக்கு நல்ல அபிப்பிராயம். வரவங்க போறவங்ககிட்டே கூடச் சொல்லிப் புகழுவாரு.... நம்பிக்கை யோட கடையை விட்டுப்பிட்டுப் போவாரு...



இந்த நம்பிக்கை — அவரு தொழிலைப் பூஜித்த முறை — அதிர்ஷ்டத்தைத் தேடிக் கொண்டாந்து கொடுத்தது. கேள்விப்பட்டவங்களே ஒருத்தர், ஒரு நாள் அண்ணனை அழைச்சுக்கிட்டுப் போனார். கூட்டா பிஸினஸ் பண்ணலாமான்னு கேட்டாரு.

''எங்கிட்டே காசு பணம் கிடையாதுங்க!''ன்னு அண்ணன் சொன்னாரு.

''நாணயமும் வேலை சுத்தமும் உங்கிட்டே இருக்கு. அதுவே பெரிய முதல். நான் பணம் போடறேன். நீ துணையா இருக்கியா?'' என்று அந்த மனுஷ்யர் கேட்டார்.

அண்ணனும் வேலை செஞ்சுக்கிட்டிருந்த முதலாளியோட சம்மதத்தைப் பெத்துக்கிட்டு பிஸினஸ் ஆரம்பிச்சது....

அந்த முதலாளியும் 'சாமி டிரை கிளீனர்ஸ்'னுதான் ஆரம்பிச்சாரு. அடடா! அவரைப் போலவும் ஒருத்தர் இருப்பாங்களான்னு நினைக்கத் தோணுது.



முன்னாள் வைஸ்ராய் லார்ட் இர்வினின் புதல்வரும் பிரிட்டிஷ் வெளிநாட்டு அபிவிருத்தி மந்திரியுமான ஸ்ரீ ரிச்சர்ட் வுட் அண்மையில் ராஜாஜியை அவரது இல்லத்தில் சந்தித்து அளவளாவினார். அப்போது அவரோடு பிரிட்டிஷ் டெபுடி ஹைகமிஷனர் ஸ்ரீ ஜே. ஈ. ஏ. மைல்ஸும் வந்திருந்தார்.

இப்போ அந்த முதலாளிக்கு மேக்கொண்டு இரண்டு டிரை கிளீனர்ஸ். 'சாமி டிரை கிளீனர்ஸ்'ஸை அண்ணன் பேருக்கே கொடுத்திட்டாரு. இப்ப அண்ணன் முதலாளி. அவரைக் கண்டு இவரு வீங்கி வெடிச்சா என்ன புண்ணியம்? அவங்கவங்க தொழிலைப் பூஜிக்கிற அளவுக்குத்தானே அவங்கவங்களுக்குப் பலன் கிடைக்கும்?

இப்ப சென்னையிலே இவருக்கு வேலை கொடுக்கிறதுக்கு ஆளே இல்லாமப் போச்சு. இவரு பவிசுதான் எல்லாருக்கும் தெரியுமே! வேலைக்கு வைச்சுக்கிட்ட முதலாளி முதலுக்கு நஷ்டம்; கஸ்டமர்களுக்கு வயிறு எரியும்!

அண்ணன்கிட்டேயாவது கடைசியா வேலை கேட்கலாம்னு மானத்தை விட்டுட்டுப் போயிருக்கிறரு........

என்ன முடிவோடு வரப் போறாரோ....

கண்ணு கலங்கறதுதான் மிச்சம்!

ராஜத்தின் புலம்பலை அவளுடைய மடியிலேயே அமர்த்திவிட்டு —

சாமி டிரை கிளீனர்ஸ் பக்கம் சென்று பார்த்தால் —

இரண்டு இதயங்களின் மாறுபட்ட துடிப்புக்கள் காற்றில் உலர்த்திய துணிகளைப்போல் படபடத்துக் கொண்டிருக்கின்றன.

எத்தனை பெரிய கடை! எவ்வளவு கண்ணாடி அலமாரிகள்! எல்லாமே மிக உயர்ந்த துணிகள்! பெருகிய வளர்ச்சியும் வருமானமும்......

ஏன் வீடு வாங்கியிருக்க மாட்டான்?

சின்னசாமியின் தாங்காமை நெஞ்சைப் பிடுங்கியது. மைத்துனன்தான்! எவனு யிருந்தால் என்ன? அதுதானே மனித மனம்!

ஒரு காலத்தில் தன்னோடு இஸ்திரிப் பெட்டி தேய்த்தவன்.

அன்று அவன் சொன்ன அந்த நியாயம் வென்றுவிட்டது.

'' சின்னசாமி! டிபன் வரவழைக்கட்டுமா ?'' — சாமிக் கண்ணு கேட்டான்.

'' நான் டிபன் சாப்பிட வரவில்லை. வேலை தர்றியா, இல்லியா ? அவ்வளவுதான்!''— பேச்சிலும் குறைவு காண வேண்டுமே !

சாமிக்கண்ணு வெகு நேரம் சிந்தித்தான்.

''சின்னசாமி! என்னை மன்னிச்சுடு. உறவு நீடிக்கணும்; அதுகூடப் பெரிசு இல்லே.... இந்த வியாபாரம் நீடிக்கணும். எங்கிட்டே வர்ற கஸ்டமர்கள் வாத்தியாரை நம்பிப் பிள்ளைங்களை ஒப்படைக்கிற மாதிரி துணிங்களை ஒப்படைச்சுட்டுப் போறாங்க! வீட்டு வேலை செய்யப் பசங்களை அனுப்பற வாத்தியாரா நான் இருந்துடக் கூடாது. அதனாலே, நூறு ரூபாய் பணம் கொடுக்கிறேன். நீ உன் கஷ்டத்தைத் தீர்த்துக்குவியோ, இல்லே ஏதாவது. கடைகண்ணி வைச்சுப் பிழைக்கக்கு வியோ, உன் இஷ்டம்!''

சின்னசாமி நூறு ரூபாயை மறுக்கவில்லை. பெற்றுக் கொண்டு நடந்தான். எங்கே நடக்கிறோம் என்று அவனுக்கே தெரியவில்லை. புரட்டாசி மாதத்து வெயில் கன்னென்று காய்ந்தது.

எந்த வேலை பார்க்கலாம் ?

அலட்சியம் காட்ட முடியாத வேலை மூட்டை சுமப்பதுதான்! கொஞ்சம் அலட்சியம் காட்டினாலும் முதுகு கனக்கேறி விடுமல்லவா?

'Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

இட்டலி,
காப்பி,
மற்றும்
விம்க்ரான் அல்லது

முட்டைகள்,
டோஸ்ட்,
பழச்சாறு, மற்றும்
விம்க்ரான்

அல்லது

சப்பாத்தி,
பால்
மற்றும்
விம்க்ரான் அல்லது

சொஜ்ஜி
தேநீர்
மற்றும்
விம்க்ரான்

காலைச் சிற்றுண்டி நேரம்
# விம்க்ரான்
சாப்பிடும் நேரம்

நீங்கள் உண்ணும் காலைச் சிற்றுண்டி, பகலுணவு அல்லது இரவுணவு எதுவாக இருப்பினும், உங்கள் உடலுக்குத் தேவையான எல்லா வைட்டமின்களையும் தாதுப் பொருள்களையும் அந்த உணவு தருமென்று கூறமுடியாது. ஆகையால் அவற்றை உறுதியுடன் பெறுவதற்கு நாள்தோறும் காலைச் சிற்றுண்டியின்போது ஒரு விம்க்ரான் மாத்திரை சாப்பிடுங்கள்.

சிற்றுண்டி சமயம் நீங்கள் சாப்பிடும் ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுவதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது. விம்க்ரானில் 11 அத்தியாவசிய வைட்டமின்களும், 8 இன்றியமையாத தாதுப் பொருள்களும் அடங்கியுள்ளன. எனவே நீங்களும் உங்கள் குடும்பத்தினரும் திட ஆரோக்கியத்துடன் சுறுசுறுப்பாய்த் திகழ தினமும் விம்க்ரான் சாப்பிடுங்கள்—ஒரே ஒரு விம்க்ரான்!



# விம்க்ரான்®

11 வைட்டமின்கள் +
8 மினரல்கள் அடங்கியது.

**நாள் முழுவதும் உங்களை**
**சக்தியுடன்வைத்திருக்க**
**ஒரே ஒரு விம்க்ரான் போதுமானது**



SQUIBB®

SARABHAI
CHEMICALS

*இ. ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்பபரேட்டட் அவர்களின் ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்காகும் கெமிக்கல் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

Shilpi HPMA 35/72 Tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)

# புதிய பார்லே மாரி பிஸ்கெட்டுடன்

# காப்பியின் சுவையை அனுபவிப்பீர்




க்ளுகோ, மொனுகோ
மற்றும் சுவைமிக்க இதர
பிஸ்கெட்டுகளின்
தயாரிப்பாளர்களான பார்லே
உங்களுக்கென பிரத்யேகமாக
வழங்குகின்றனர்—
காப்பியின் சுவைக்குச் சுவையூட்டும்—

## பார்லே
## மாரி
## பிஸ்கெட்டுகள்

**அருமையான ருசியுள்ளவை-ஃபாயில்-ஸீல்டு பேக்குகளில்**

everest/1080g/PP tam